இதனாற் கிடைக்கும் சகல வருமானமும் இவ்வூர்
தர்மக் கல்விச்சாலைக்கே உபயோகமாகிறது.

# Words of Peace.

Vol. II.] சாந்தி வசனம். [No. 5, 6 & 7.

ஸ்ரீமான். லெட்பீட்டர் அவர்களால்

இயற்றப்பட்ட

# What Theosophy Does For Us.

## பிரமஞானத்தின் விசாரத்தால் நமக்குறும் பயனியாதும்

Published by
A. RATNASABHAPATHI MUDALIAR, F. T. S.,
*Santhi Asramam, T. S. Tirunnevachur,*
Peralam Post Tanjore Dt.

திருவாரூர்
பிர்ம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

1918.

 [விலை அணா 9.

# பிரம்மஞானத்தின் விசாரத்தால் நமக்குறும் பயனியாது.

சேதனரூபமாம நமது வாழ்விற்கு மூலாதார மான சில முக்கிய விஷயங்களை யாராய்ந்து பார்க்க விச்சைகொள்ளு மாழ்ந்த கருத்துடையோன் எவனும், அவற்றைப்பற்றிய யதார்த்த மாய ஸ்வரூபங்கடான் யாவையோவென நிச்சயமாய்த் தெளியுகொள்வற்கு விரும்புவனன்றோ! அவ்விஷயங்களாவன, கடவுளெனுமோர் வஸ்து தானுளதோ?, உளதேயாயி னதனியற்கை யல்லது சுபாவமாவதியாது?, அதற்கும் பிறந்திறந்துழலு மானிடர்க்குமுள சம்பந்தமு மெத்தன்மையதாகும்; அன்றியும் மானிடராதியாம் பிரபஞ்சப் பொருட்களியாவு மெங்கிருந்திங்கு பிறப்பினிலுற்றன?, மற்றுமுடிவினிலெங்குதான் போய்ச்சேரும?, அங்ஙனமாம் வருவதும் போவதுமாய நமதுபிரபஞ்சவாழ்வின் கருத்துத்தானென்னை?, இன்னுமிவைபோன்ற பிறவுமேயாம். இவ்வகை வியவஹாரங்களைப் பற்றிப்பேசுந் தொழில்படைத்த சமயமுறைகளுமிவ்வுலகினி லெண்ணிறந்தனவுளவேயாயினும், அவற்றுளொவ்வொன்றும் மேலேகூறிய விஷயங்களைக் குறித்துத் தனித்தனியாகும் வேறுபடுங் கொள்கைகளையே பாஷித்துவந்திருக்கின்றன. இதுவுமன்றி யிக்கொள்கைகளு மொன்றினோடொன்று மிகுதியு மாறுபடுபவைகளாகவே விளங்கியும், ஒன்றையொன்று மனக்கசப்புடனிகழ்ந்து குறைகூறி விரோதிப்பதாமியற்கை கொண்டனவுமாகின்றன. * ஆதலினிதனைக்

---

* சமயவாதிகடத்தமதங்களே
யமைவதாகவாற்றிமலைந்தனர். (திருவாசகம்)

செப்பரியசமயநெறி யெல்லாந்தன்றன்
தெய்வமேதெய்வமெனும்
அப்பரிசாளருமஃதே பிடித்தாலப்பாலடுத்த
தந்நூல்களும் விரித்தேயனுமானாதி
யொப்பவிரித்துரைப்பர். (தாயுமானவர்)

கண்ணுறு மறிவுடைமாந்தரிற் பலரும், உண்மைகைக்கொள்ளாக் குருடரையொப்பா ரிவரேயென வச்சமுற்றலமந்து, இங்கெல்லாம் பரமார்த்தமாய வுண்மை தானில்லையோவென ஐயமுற்று, இவ்வகை யுண்மையாராய்ச்சிக்குரிய சமயவிசாரங்களனந்தமும் பயன்படாவென வெச்சமுற்றேமாந்திருக்குங் காலமுங்கிட்டியதன்றோ!. *

ஆதலினிவ்வகைத் துணிவையோர்விதமடைந்தார்க்கு, நமது பிரபஞ்சமுழுமையுமழகுடன் விரித்து விளக்குமோர்மாய்ச்சியொன்று நிச்சயமாயுளதென வெம்போலியர் அறையுமாற்றும், ஆரம்பத்தில் வியப்பைத்தருவதுவே யாகின்றது. ஆயினும் உலகினில் விளங்கும் இயற்கையின் தத்துவங்களையெல்லா நாமறியுமட்டி, லுள்ளவாறு, கூட்டுதல் குறைத்தலின்றி எடுத்துரைப்பதும், இவ்வாறாய பிரஸ்தாபங்களையுமாந்தர், சமயசாத்திரக் கோட்பாடுகளைப்போன்று ஆக்ஷேபணையின்றி யேற்றுக்கொள்ளல் வேண்டுமெனு நிபந்தனையின்றியே, யவற்றைக் கவனங்கொண்டு சோதித்தறிந்து தெளிந்துகொள்ளலே வேண்டுமென்பதுமட்டுங் கொள்கையாக்கொண்டு விளங்குவதுமானதோர் ஆராய்ச்சியுமொன்றுண்டு. இதுவே 'தியாஸபி' யென விக்காலத்தவர் பெயர்கொண்டழைத்துவரும் பிரமஞானப் பேராராய்ச்சியாகும். † இஃது

---

* தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி
முனிவிலாததோர் பொருளதுகருதலும்
.............................................
ஆத்தமானார் அயலவர்கூடி
நாத்திகம்பேசி நாத்தழும்பேறினர். (திருவாசகம்)

† மாலறவுஞ்சைவ முதன்மதங்களாகி
மதாதீதமான வருண்மரபுவாழி.
நதியுண்டகடலெனச் சமயத்தையுண்ட
பரஞானவானந்த வொளியே!

அளவிலாமதந்தொறு மவரவர்பொருளென
உளநிறைந்திருக்கு மொருபொற்பணிதி.

வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே!

பேரனந்தம்பேசி மறையனந்தஞ்சொலும்
பெரியமௌனத்தின் வைப்பை. (தாயுமானவர்)

பல்லாயிரங்காலங்களாய் மேலோர் தம்பெருஞ்சோதனைகொண்டுழைத்துத் தெளிந்துகொண்ட தெளிவின்பயனாய் ஏற்பட்டிருப்பதுவேயாகும். * இந்நாளிலு மதற்குகந்த யோக்கியதையைச் சம்பாதிக்கத் துணிவுகொள்ளு மாந்தருக்கும் அஃதுண்மையெனத்தந் சோதனையா லறிந்துகொள்ளற்பாலதேயாகும். †

இத்தன்மையதான பிரமஞானமென்பதுமொரு தனிச் சமயமாகுமோவெனின், ஆகாது. பின்னை யிதற்குமற்றைச் சமயங்கட்குமுள்ள சம்பந்தமாவது பூர்வகாலத்திய தத்துவ விசாரங்கட்குஞ் சமயமுறைகட்குமெது விளங்கிற்றோவதுவேயாகும். மற்றெச்சமயத்தையும் விரோதித்துப் புறக்கணிக்காமல் அவையாவற்றையுந் தன்னுள்ளடங்க விடங்கொடுத்து, அவற்றுள் ளொன்றிற்கொன்றுள்ள முறண்பாடுகளையெல்லாம்

---

* விள்ளொணாஞானம் விளங்கியமேலோர்
கொள்ளைகொண்டுண்ணக் குறைவிலாநிறைவு
ஞானக்கண்ணாக் கண்டவன்பர்கண்ணூடே
யானந்தக்கடலாய்.

ஆறொத்திலங்குசமயங்க ளாறுக்குமாழ்கடலாய்
வீறிப்பரந்தபரமான வானந்தவெள்ளமொன்று
தேறித்தெளிந்துநிலைபெற்ற மாதவர்சித்தத்திலே
யூறிப்பரந்தண்டகோடி யெல்லாநின்றுலாவியதே (தாயுமானவர்)

† வாதமிடுஞ்சமயநெறிக் கரியதாகி
மௌனத்தோர்பால்வெளியாய் வயங்காநின்றவெளியை.

வாயுவையடக்கியு மனதினையடக்கியு மௌனத்திலேயிருந்து
[illegible]திமண்டலத்திலே கனல்செல்லவமுதுண்டு வனமூடிருந்துமறிஞர்
ஆயுமறைமுடிவான வருள்நாடினர். (தாயுமானவர்)

முன்னைப்பிறவியிற் செய்தமுதுதவம்
பின்னைப்பிறவியிற் பெற்றாலறியலாந்
தன்னையறிவ தறிவாமஃதன்றிப்
பின்னையறிவது பேயறிவாமே. (திருமந்திரம்)

அகண்டவென்ன வருமறையாகமம்
புகன்றநின்றன்மை போதத்தடங்குமோ
செகங்களெங்குந் திரிந்துநன்மோனத்தை
யுகந்தபேருனை யொன்றுவரையனே.

உண்மையின் விளக்கத்தால் நீக்கி, சமரஸப்படுத்தும்யற்சியுடையதுவே பிரமஞானவிசாரமாகும். அன்றியு மிந்நூலின் துடக்கத்தில் கூறிப்போந்த மூலவிஷயங்கள் யாவற்றையும் பற்றி முடிவாய வுண்மையைக் கண்டுகொள்ளல் உழைப்பாளியாகு மானிடருக் கசாத்தியமாகாதெனவும், இவ்வழியில் மானிடர் அறியவேண்டியதாய ஞானமூட்டை பூரணமாய் விரிந்து கிடக்கின்றதெனவுங்கூறுகின்றது. சாசுவதமாய் விளங்கும் பேரறிவின் சிறிது பெரிதான பாகமே யுலகினிற் றோன்றிநிற்கு மொவ்வோர் மதமல்லது சமயநெறி யாகுமென்பதும், இவற்றுட் காணப்படும் வேறுபாடுகளியாவும், உலகமாதிகட்கெல்லா மதீதமும் ஏகமுமாகிய இவ்வுண்மையையே பலவழிகளல்லது பிரகாரங்களால் வருணிப்பதாலெழுபவைகளேயன்றி வேறன்றென்பதும், இப்பிரமஞானப் பேராராய்ச்சியின் கொள்கையாகும். இதற்கிஃது காட்டுங்காரணம் யாதோவெனின் எவ்வளவு நமதுலகின் சமயங்கள் ஒன்றிற்கொன்று வெளிக்கூற்றுகளில் விரோதப்படினும், அவையவற்றின் யதார்த்தமான கருத்துக்களைமட்டு மொருவன் பக்ஷபாதமின்றி யொப்பிட்டுப் பார்ப்பானாயின், அவ்விரோதங்களியாவுஞ் சமாதானமடைந்து சமரஸமாதற்குதவியே கிடைக்கின்றதென்பதே. இம்மட்டோ! இக்காலத்தில் மேற்றிசையாரின் முயற்சியாகிய பிரத்தியக்ஷ வாராய்ச்சிக்கும் (Science) சகலசமய கோட்பாடுகளுக்கு முரண்பாடு நிச்சயமாயுளதென நினைப்பது அறிவுடையர்க்கழகாகாதென்றும், பின்னை சமயங்களின் பலவந்தரங்க வுண்மைகளை யிப்பிரத்தியக்ஷவாராய்ச்சி நன்கு விளக்குவதால் அச்சமயங்கட்கு அஃது தகுந்த வுதவிபுரியக்கூடுமாதலின், இவ்வையகத்தில் உண்மை மதங்களியாவுமஃதைத் தழுவி யாதரித்துவருதலே நியாயமென்றும், அவ்விதமே யிப்பிரத்தியக்ஷசோதனையா முயற்சியும் தாந்தோணியாய் நிஷ்பிரயோசனமான விதங்களிற் பிரவர்த்தித்துக் கெட்டுப்போகாமல், தானுமிவ்வுலகினர்க்குதவும்படி யுழைத்து வருதற்கு சமயவாராய்ச்சியைத் துணையாக்கொண் டொழுகுதல் வேண்டுமென்றும், இப்பிரமஞானங்கூறி விளக்குகின்றது.

வனெனில் முடிவி லிப்பிரமஞானமென்பது எவற்றினு மேலான ஆன்மசோதனையே யாகுமன்றோ! இவ்வுலகினில் பிரத்தியக்ஷ வஸ்துக்களைச் சோதித் துண்மைகளைத் தெளிந்துகொள்வதுபோலவே, நமதிந்திரியங்கள் செலமாட்டாத வுலகங்கடந்த பெருமார்க்கங்களிலும் தவத்தின் வழியாற்றுதியடைந்தோர் சோதனைசெய் துண்மைகளையறிந்துகொள்ளுமார்க்கமே யிதுவாகும். இனியிவ்வகை யுயர்ந்தோரது ஆராய்ச்சியின் பயனியாதோவெனில், குறுகியதுங் கண்டப்பட்டதுமான இவ்வுலக திருஷ்டியில் வேற்றுமையுள்ளதும் பிறிவுடையதுமாத் தோன்றுமிப் பிரபஞ்சத்தின் விஷயங்களனைவற்றையு மகண்டமாய் விரிந்து துலங்கிய ஆன்மதிருஷ்டிகொண்டு சோதனைசெய்வதால், முற்கூறிய தசையிலவற்றுட் காண்டற்கரிய வொத்துமை யல்லது சம்பந்தங்களாகும் பல விரகசியங்களையு மறிந்துகொண்டு, அவைகளெல்லாம் உண்மையில் யாவற்றையுந் தன்னுள்ளடக்கி உலகத்தையணிவகுத்து ஒழுங்குடன் நடாத்திவரும் பேரறிவின் அம்சங்களல்லது பிரதிபிம்பங்களேயெனத் தெளிவடைந்தபின், நமதுலகவாழ்க்கையின் பல சங்கடங்களையு நீக்கி, நம் வியவகாரங்களை யெல்லாங் காரணமுங் கருததுந் தோன்றுமாறு பொருட்படுத்தி விளக்குவிக்கும் உயர்நலம் பொருந்திய அறிவொன்றை நாமடைவதுவேயாகுமென்க.

இப்பெரிய வாராய்ச்சியல்லது மேலுலகங்களின் பிரத்தியக்ஷ சோதனையில் மூவித மூலவுண்மைகள் வெளியாகின்றன. இவையாவும் சிலர் தம்மாழ்ந்த வாலோசனைகளாலுத்பத்தி பண்ணிக்கொண்ட கருத்துக்களன்று. அல்லது ஓர் வகையினரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் ஆக்ஷேபித்தற்கடாத கொள்கைகளுமன்று; * பின்னை சூட்சும திருஷ்டியுடையோரிற் பலருங் கண்கூடாகக் கண்டு தெளிந்த பரமார்த்தமாய

---

* கேட்டலுடன்சிந்தித்தல் கேடிலாமெய்த்தெளிவால்
வாட்டமுறுவுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யானநிட்டையினை மேவினர்கட்கன்றோதான்
பொய்யாம்பிறப்பிறப்பும் போம். (தாயுமானவர்

வுண்மைகளேயன்றி வேறன்றென்க. * இம்மூன்று மூலதத்து வங்களுமியாவையெனிற் கூறுவாம்.

1. தெய்வமென்பதொன்றுண்டு. அவர் முற்றிலும் களங் கமற்ற நன்மையின் வடிவினர். நம்முள்ளும், வெளியிலுமெங் குமாய் நிறைந்து நின்றும், என்று மழியாத்தன்மையுடன் எக்காலத்தும் எவற்றிற்கு முயிர்க்குயிராய்த் தழைத்தும் விளங் குவோன். அவனைக் கேட்கவாவது, பார்க்கவாவது, ஸ்பர் சிக்கவாவது எவராலு முடியாது; ஆயினு மவனையடைய விரும்புவோன் சொல்லற்கரியதோர் சூட்சும வழியில் அறிந் தடைவதற்கு வழியுமுண்டு. †

---

* மனத்தாலும்வாக்காலு மன்னவொண்ணுமோன
வினத்தாரேநல்ல வினத்தார்—கனத்த
புகழ்கொண்டவருமன்னவரே கூறறியமுத்தி
நெறிகண்டவரு மன்னவரேதான்.

† அத்துவிதவத்துவை சொற்பிரகாசத்தனியை
யருமறைகண்முரசறையவே யறிவினுக்கறிவாகி
யானந்தமயமானவாதியை யநாதியேகதத்துவ
சொரூபத்தைமதசம்மதம் பெறுச்சாலம்பாலிதமான

........... .. ............ . ...........................

நிரஞ்சனநிராமயத்தைச் சித்தமறியாதபடி
சித்தனின்றிலகுதிவ்ய தேசோமயத்தை
சிற்பரவெளிக்குள் வளர்தற்பரமதான
பரதேவதையை யஞ்சலிசெய்வாம்.

யாதுமனநினையுமந்த நினைவுக்குநினைவாகியாதின்பாலும்
பேதமறநின்றுயிருக்குயிராகி அன்பருக்கேபேரானந்தக்
கோதிலமுதூற்றரும்பிக் குணங்குறியொன்றறத்
தன்னைக்கொடுத்துக் காட்டுந்
தீதில்பராபரமான சித்தாந்தப்பேரொளியைச் சிந்தைசெய்வாம்.

யுன்னைநானணுகவுந் தண்ணருள்வகுக்கவிலையோ
பொய்வளருநெஞ்சினர்கள் காணுதகாட்சியே.

பொய்யிலாமெய்யரறிவிற்
போதபரிபூரண வகண்டிதாகாரமாய்ப்
போக்குவரவற்ற பொருளே.

2. இனி மானிடனும் உண்மையில் நாசரகிதன். இவ னடையவிருக்கும் மகிமையும் பெருமையு மளவு கடந்தன வேயாகும்.

3. இப்பிரபஞ்ச முழுவதும் பரமமாய நீதி நிரம்பிய நியதியினுக்குள்ளுக்குள்ப்பட்டே நிற்கின்றதாதலின், ஒவ்வொரு மானிடனும் தனது நன்மை தீமைகளுக்குத் தானே கர்த் தாவாகி, தனக்குயர் க்ஷேமமல்லது அல்லல்களை விளைவித்துக் கொள்ளற்கும், தனது வாழ்வு, பெருமை, அல்லது துன்ப மிவற்றைத் தேடிக்கொள்ளற்குந் தானே காரணமாகிறான் என் பதேயுண்மை.

இச்சிறுபுத்தக மெழுதுவான்போந்த வெனது கருத்து மிப்பிரமஞானப் பேராய்ச்சியின் ஆதியோடந்தமான தொகு தியை யெடுத்துரைப்பதன்று; பின்னையிதனால் நமது பிரதி தின வாழ்க்கையிலேற்படும் பலனியாதென்பதை யெடுத்துக் காட்டுவதே. ஆதலின் இவ்விஷயத்தை யொருவாறு முடிவு வரையுமறிய விரும்புவோர் "பிரமஞான விளக்க"மெனு மற்றோர் நூலின்கண் மேலுமறியவேண்டிய விஷயங்களைக் கண்டுணர் வார்களாக.

இனி மேலேகாட்டிய மூலாதாரமான மூன்றுண்மைக ளையும் அவற்றினின்றெழு மநேக முடிவுகளையு மொருவன் கூர்ந்தறிந்துகொள்ளின், அவனது இயற்கையு மவனதுலக வியலும் எம்மட்டில் மாறி நிற்கும்படி நேர்ந்துவிடுமென்பதை எளிதிற் பிறர் அறியும்படி கூறுதற்கென்னாலியலாது. ஆதலின் யானிங்கு சில முக்கியமான கருத்துக்களைமட்டும் இவ்விஷய த்திலெடுத்துக் காட்டுவேனாயின் அவற்றை யூகித்துணர்ந்து

---

* தான்முன்னஞ்செய்த விதிவழிதானல்லால்
வான்முன்னஞ்செய்தங்கு வைத்ததோர்மாட்டில்லை
கோன்முன்னஞ்சென்னி குறிவழியேசென்று
நான்முன்னஞ்செய்ததே நன்னிலமானதே.

ஆறிட்டநுண்மணலாறேசுமவாதே
கூறிட்டுக்கொண்டு சுமந்தவாறில்லை. (திருமந்திரம்)

இதைப் படிப்போரும் மேலுள்ள விவரங்களைத் தாமே சோதித்துத் தெளிந்துகொள்ளுவர்களென்பதே யென் கருத்தாகும்.

உலகங்களின் பரிபாகமார்க்கத்தை வகுத்து நடாத்தி வரும் வஸ்துவானது மிகவுமேன்மையுடையதோர் மகாசக்தி மயமானதென்பதையும் அவன் பரம கருணையு மறிவு நிரம்பிய வனே யென்பதையுமட்டு நாமறிந்து நம்பிக்கை கொள்ளுவோமாயின், அவனுடைய கையி லடங்கிய விப்பிரபஞ்ச வியவகாரங்களெல்லாம் அவனது கருத்தான விப்பிரபஞ்சத்தின் [illegible] திற் கனுகூலங்களேயாகுமென்பதையு நாம் தெளிந்துகொள்ளலாகுமன்றோ! * ஆதலின் இங்குள்ளயாவும், நேருஞ்சகல சம்பவங்களுமெல்லாம் க்ஷேமமாகவே முடிகின்றன வென்பதே யுண்மையாகும். அன்றியும் இத்தன்மையதான க்ஷேமமாகு முடிவு எப்பொழுதோ காலாந்தரத்தில் வாய்க்குமென்பதுமட்டுமன்று, பின்னை யுண்மை விளங்குமாறு கூர்ந்து சோதிப்போமாயின், இத்தருணத்தில் இவ்வுலகின் கண்ணேயே சகலமும் க்ஷேமமாகவே பிரதிநிமிஷமு முடிந்துகொண்டே வருகின்றனவென்பதிற் றடையேயில்லையென்பதும் புலப்படும். ஆகவே மானிடஜன்மமெடுத்துள்ள ஜீவன் எவனுக்கும் தற்காலத்தி லவனெவ்வித ஸ்திதியிலிருப்பினும், முடிவில் 'பரிபூரணவகண்டிதானந்த நிலை' வாய்க்குமென்பதிற் சந்தேகமே யில்லை. அன்றியு மிம்மஹிமை யொவ்வொரு மானிடனுக்கும் எப்பொழுதோ வருங்காலத்திற் கிட்டவிருக்கின்றதென்பது மட்டுமன்று; பின்னை யிந்நிமிஷமே யொவ்வொருவனும் அவ்வுயர்பதவியை நோக்கியே சென்றுகொண்டிருக்கிறானென்பதே யுண்மையாகும். ஆதலின் தற்காலத்திலவனைச் சூழ்ந்துநிற்குஞ் சந்தர்ப்பமாதி நிலைமைகளியாவும், இவனு லவற்றை யுள்ளபடி யறிந்துகொள்ளக்கூடுமாயின், 'இவனுக்குச் சௌகரியங்களை விளைவிக்கின்றனவேயன்றி யிடைஞ்சல்களைத் தரு

---

* மருவி யெப்பொருளும் வளர்ப்போன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
அருள்நனி சுரக்கு மமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க. (திருவாசகம்)

வருவாகா. ஆனால் உலகிலெயபுறத்து மானிடர்க்குந் தீமை யுந் துன்பமுந் துக்கமுமே செறிந்துநிற்கு முண்மையை கண் ணுறும்பொழுது மனம் பதைக்கின்றதே எனின், அவ்வித முலகிற் றுன்பமுள்ளது வாஸ்தவமாயினும், உலகங்கடந்த திருஷ்டிகொண்டு நோக்குவார்க்கு இவை யாவும் க்ஷணகால நின்றப்பால் நீங்குபவைகளேயன்றி நித்தியமாயுள்ளன வாகா வென்பது விசதமாகும்.

இனி பிரபஞ்ச வியவஹாரத்துண் மூழ்கி, அதன்மாயை யால் மறைவடைந்து, குறுகிய திருஷ்டியால் நோக்குவார்க்கு இவ்வுண்மை புலப்படுமோ? அவ்விதமின்றி தமது பந்தங்க ளைச் சுட்டறுத்து மேலோங்கிய வான்ம திருஷ்டிகொண்டு சோதிப்பார்க்கே மறைந்துகிடக்குஞ் சகல விரஹஸியங்களும் பிரத்தியக்ஷமாகி, அகண்டமான பெருகிய பார்வையேற்பட்டு, மேலே கூறிய பரமார்த்தமும் வெளிப்படும் என்க *

உலகினரின் திருஷ்டியால் இப்பரமரகசிய மறியப்படு வதசாத்தியமே யாகுமாயினும், அதைத தாண்டி யப்பாற்செ ன்றுஉயர்பரமான்ம நோக்கா லுணர்வார்க்கு இப்பூரணதிருஷ்டி வாய்ந்து சகல வுண்மைகளையு மறிந்துகொள்ளுந் திறமையுங் கிட்டுமன்றோ! உலகமாயையி னுள்ளடங்கியே நின்று, அங்கு நிகழுந் தீமையாதி குறைவையே குறிக்கு முணர்வுகொண்டு, உண்மையறிய விரும்புவோமாயின் நாமுள்ளபடி யிப்பிரபஞ்ச நிர்மாணத்தி னிரகசியத்தை யறிதல் எங்ஙனங்கூடும்? பின்னை பிரபஞ்சாதீதமாகி நினைவையுயர்த்தியும், பிரக்ஞையின் மேநிலை களில் வியவஹாரம் புரிந்தும்நின்றால், கணநிலைகளத்தனையும் ஏக

* காலமூன்றுங் கடந்தொளிராநின்ற
சீலமேனின் றிருவருளாலிந்த்ர
சாலமாமிச்சகமென வெண்ணிநின்
கோலநாடுதலென்று கொடியனே.

பொருந்துசகமனைத்தினையும் பொய்ப்பொய்யென்று
புகன்றபடி மெய்யென்றே போதரூபத்
திருந்தபடியென்றிருப்ப தன்றேயன்றோ!
வெம்பெருமான்யான்கவலை யெய்தாக்காலம்!

மயமான திருஷ்டியால் நோக்கி துன்பமாதி குறைவுகளியாவும் அநித்தியங்களென்பதையும், முடிவில் இன்பமா நிறைவே நித்தியமென்பதையு நாமறிந்துகொள்ளுதல் கூடும். ஆதலினிப் பிரபஞ்சத்திலுள சகலஜீவ சமுகத்தின் க்ஷேமத்திற் கொரு குறைவுமில்லையென்ப துண்மையெனவு நாமந்நிலையிலறிந்து கொள்வோமென்க. இம்மட்டோ? எப்பொழுதோ முடிவில் இவ்விதமாய் க்ஷேமங்கிடைக்குமென்பதன்று, பின்னை யுலகமெலாம் வெளிப்படையான துன்பத்தாலுமோயாப் பெருங்கலுகத்தாலுமொத்துண்டு அல்லற்பட்டுழலு மிந்நருணத்திலுங் கூட, செகத்தின் பரியாகமாகும் பெரும்பிரவாகந் தடைபட்டு நின்றுவிடாமலே யதன் போக்கிற் சென்றுகொண்டிருக்கின்றதாதலின், சகலமுமிப்பொழுதும் க்ஷேமத்தையே யடைந்துகொண்டிருக்கின்றது வென்பதுவே யுண்மையென்பது வெளியாகும். ஏனெனில் அனந்தமுமுடிவி லானந்தமே யடையுமாறு அத்தனை யொழுங்குடன் நடத்தப்பட்டு வருகின்றதேயன்றோ! உதாரணமாய் பெருங் கூக்குரலிட்டுப் புரண்டுவரும் ஜலத்தின் வேகத்தையுடைய 'நயகாரா' வென்பதைப்போன்ற ஒரு பெருநதியைப் பாருங்கள். அதன் ஜலத்தின்மேற்றரையில் ஒரு சிறு பூச்சி யடித்துக்கொண்டுபோகப் படுவதாய் பாவனை செய்துகொள்ளுங்கள். அம்மகாநதியின் ஜலமும் இருகரையுந் தாவிப் பொங்கித் ததும்பி நுரைமயமாகிக், கொக்கரித் தாரவாரிப்பதையும், கற்பாறைமயமான தரைகளின் மோதியுருண்டோடிவரும்பொழுது இங்குமங்கும் பாய்ந்து பெருத்த வலைகளுடன் கொந்தளித்துச் செல்வதையுங் கவனியுங்கள். இப்பொழுது அதன் பிரவாஹத்திலோர் புரத்திலுருட்டித் தள்ளிக்கொண்டுபோகப்படும் அச்சிறு பூச்சிக்கு அவ்வாற்றினது வெள்ளத்திரைவாரமும் நுரையும், முன்னும் பின்னுமோடிக் குழம்பி நிற்பதுந்தவிர வேறெதுவுந் தென்படுமோ? இதன் திருஷ்டிக் கித்தருணத்தி லிவ்வாறு தான் அகப்பட்டுக்கொண் டிடுக்கண்ணடையு மவ்வலைகளின் ஸ்தானமே யுலகமுழுவதுமெனவும், அதுவும் கேவலம் ஒழுங்கும் முறையுமின்றி, சில வேளைகளில் முன்செல்லுவதுஞ் சிலவேளைகளில் திரும்பிப் பின்செல்லுவதுமாய் பெருங்

குழப்பமுங் கலக்கமு நிரம்பியே நிற்குமோர் பிரவாஹந்தா னெனவும், அதன் மத்தியில் மொத்துண்டு கிடத்தலே தன துலக வாழ்க்கையெனவுந், தோன்றுவது சகஜமேயன்றோ! ஆயினு மிக்குழப்பத்தைவிட்டுச் சற்றப்பாலகன்று கரையின்மீ தேறி மேட்டினின்றுங் கீழேநோக்கி திருஷ்டியைச் செலுத்து வோமாயின், நதியின் பிரவாஹமுழுமையும், ஒவ்வோரிடங்க ளிற் றோன்றுஞ் சுழிகளில் தவிர, இடைவிடாது அப்பாற் சென்றுகொண்டே வருகின்றதென்பதைக் காண்போம். இச் சுழிகளிலுங்கூட மேற்பார்வைக்கு மட்டுஞ் ஜலம் பின்னேறிச் செல்லுவதாக விளங்கினு முண்மையில் அங்குள்ள ஜலமும் மற் றைய பாகங்களிலுள்ள ஜலங்களோடுகூட நகர்ந்துகொண்டே வருகின்றதையுந் தெரிந்துகொள்வோம்.

இவ்விதமே யுலகவாழ்க்கையின் வேதனை குழப்பங்க ளைத் தாண்டித் தன் பிரகஞா வியவஹாரங்களை நடாத்திக் கொள்ளுந் திறல்வாய்ந்த தத்துவ விசாரியொருவன், தனது யர் திருஷ்டியால் இவ்வுலக வியற்கையை யுற்றுநோக்குவானா யின், நாம் துன்பமெனக் கருதுவதையும், அஃதெவ்விதம் நமது அபிவிர்த்திக்கு நேர்விரோதமாகி யதைத் தடைப்ப டுத்துகின்றதென்பதையும், மிகத் தெளிவுடன் கண்டுகொள் வானாயினும், வெளிப்பார்வைக்குமட்டு மிஃதிவ்விதமாகுமே யன்றி யிதையதார்த்தமாயுணரின், மேலே கூறியபடி 'நயகரா' மகாநதியின் பெரும்பிரவாஹமானது, ஆங்காங்கு தோன்றிக் கொப்பளித்துநிற்குநுரைக்கூட்டங்களைமட்டும்பார்ப்போர்க்கு, அவற்றாற் றடைப்பட்டு நிற்பதுபோற் றோன்றுவது எப்படி யுண்மையில் வெளிமயக்கமாய் முடியுமோ வப்படியே, இப்பிர பஞ்சமும் கடவுளால் வகுக்கப்பட்டிருக்கும் பரிபாகமகாமார்க் கத்திற்கு மீறிநிற்றலமையாதாதலின், அதன் கருத்தும் முடிவு மாய ஆனந்தமு மபிவிர்த்தியுமே யுண்மையாய் ஏற்படுமென்

பதை ஐயந்திரியபறவுணருவனன்றோ! * ஆதலின், உலகினை ருட்டுன்பமடைந்தோர், அவைவருக்கு மிவன் மிகப்பரிந்திரங்கு மியல்புடையனாயினும், முடிவில் சகலரு மானந்தமே யடைவரென்னுந் திண்ணங்கொண்டவனாதலால் இவனுக்குத் தீராப் பெரு மயக்கமேற்படுவதெங்ஙனம்? இவ்விதமே தானு முலகமும் படுந்துன்பங்கள் யாவு முடிவிலானந்தம் வாய்ப்பதற்கு வழிகளே யாகுமென்பதைத் தன்னறிவிலுணர்ந்து நிற்போனாத லிவனுக்குப் பிரமஞான வாராய்ச்சியினாலேற்படும் பலன்களிலொன்றாவது, எவ்வகைத்துன்பம் வரினு மாறாத சாந்தியல்லது அதனினுமேலான சந்தோஷமே வாய்க்குமென்க.

இத்தன்மையுடையோனா மொருவனுக்கு நெஞ்சில் எவ்வகைக் கவலை யல்லது வியசன மென்பது சிறிதேனு முண்மையிராது. ஏனெனில் பிரபஞ்சமுழுமையுங் கடவுளினாட்சியிலிருப்பதால் முடிவிற் க்ஷேமத்தையே யடையுமாதலின் இவன் கவலைகொள்ளும்படியான விஷயம் வாய்ப்பது எங்ஙனம்? தனதாராய்ச்சியின் தெளிவால் இவனுக்குள்ளுறைவிச்சாந்தியுஞ் சந்தோஷமுமே நிறைந்து நிற்பதாகின்றது. ஏனெனில் தீமையென்பது பலரிடத்திலிருப்பினும் ஒருவனிடந் தோன்றினும், யாவற்றையும் வென்று தன்வயப்படுத்திவரும் செகத்தின் பரிபாகசக்திக்கு அவைது விரோதப்

---

* பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருட்
டாரகத்தைப் பற்றியன்றோ பராபரமே!

எதுந் திருவருளி னிச்சையா மென்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர் பாற்
றீது நெறி செல்லுமோ செல்லாதே
செல்லுமிட மின்பமலாற் சொல்லுமோ வேதத்தொனி.

நடத்தியிவ் வுலகையெல்லா நாதநீ நிறைந்ததன்மை
திடத்துட னறிந்தானந்தத் தெள்ளமுத ருந்திடாதே
விடத்திர ளனைய காமவேட்கையி லழுந்திமாயைச்
சடத்தினை மெய்யென் றெண்ணித்தளரவோ தனியனேனே.

அனந்த பதவுயிர்க ளொடாறுமுயிரா யென்றுமா
னந்தநிலையாகி யளவுக் கெட்டாத்
தனந்தனிச் சின்மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டா
சதசத்தா யருட் கோயிற் றழைத்ததேவே.

படுவதால, நிலைத்துநிற்கமுடியாமற் சின்னாட்குப்பின்னர் அச் சத்தியால் அழிவடையுமாதலின் எப்பொழுதும் ஸ்திரமா யுள்ளதுவாகாது. பின்னை நன்மை யெனப்படுவதோ ஓரிடத் திருப்பினுஞ்சரி, அல்லது பலர் சேர்ந்தவோர் கூட்டத்தி னிற் காணப்படினுஞ்சரி, சாசுவதமாகி யழியாத் தன்மை பெற்றது மியாவருக்கும் பிரயோசனப்படுவது மாகும்; ஏனெனில் ஜகந்நியதியாம் பரிபாக மார்க்கத்தின் சத்தியா னது அஃதைப் பின்பற்றிக் கட்டிக்காத்து விருத்தியடைவி க்குமாதலின் அதற்கு வீரியமு மழியாத்தன்மையுந் தன்படி யே வாய்க்குமன்றோ! இக்காரணங்களால், இவ்விதஞானம டைந்தோன் முடிவில் எல்லாம் நன்மையையே யடையுமென்ப திற்றடையில்லை யென்றறிந்து கொள்வதால், தன்னைச் சூழவிரு க்கு மனந்தமானிடர் படுந்துயரனைத்தையுங் கண்டு இரக்க மும் கருணையுங் கொள்ளாது கன்மனத்தனாய்த் திரிவனென் றெண்ணுதல் கூடாது. ஏனெனில் தன்சக்திக்கெட்டியமட்டி லிவ்வனந்தந் துன்பங்களையு மகற்றிவிடுவதற்கு முயன்று வரல் தனது கடமையே யாகுமென இவனறிந்து கொண்ட வனன்றோ! அவ்வித முலகினரின் துன்பமாம் பாரங்களைக் குறைக்க யத்தனித்தல் உண்மையி லுலகத்தை நடாத்தி வருஞ் சக்தியுடன் ஒன்றுபட்டுழைப்பதுவே யாகுமென்றும், அவ்வாறுய வுழைப்பால் பிரபஞ்சத்தின் க்ஷேமம், ஜயமாய் முடிவுபெறுநாள் சற்றுச்சமீபிக்குமென்றும், இவன்தனது ஆரா ய்ச்சியால் விளக்கிக்கொண்டிருப்பவனன்றோ! ஆதலின் சகல மன்பதைகளின் நன்மைக்கு முழைப்பவருள் இவனினு மதிக வுத்ஸாஹ முடையோனைக்காண்ட லரிதேயாகும். * சாதார

* தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்றுதண்ணருள்கூர்
செம்மையருக்கேவலென்று செய்வேன் பராபரமே!

எல்லாரு மின்புற்றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே!

விண்கருணை பூத்ததெனமேவி யுயிர்க்குயிராய்த்
தண்கருணைதோன்ற வருடாராய் பராபரமே!

நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந்
தானென வுண்மைச்சாருநா ளென்னுளோ? (தாயுமானவர்)

ணமாய் உலகின்கண் பிறர் க்ஷேமத்தைக்கோறி யத்தனிப் பவரெல்லாந் தங் கோறிக்கை யீடேறுமோவென மனந்தளர்ந்து நம்பிக்கையற்றிருப்பதுபோல் இவ்வாராய்ச்சி யுள்ளானு மிராமல், தன்மனத்திலுள்ள நம்பிக்கையின் பூர்த்தியால் சதா காலமும் பேருழைப்புடன் நிற்பவனேயாவனென்க. *

பிர்மவித்தையின் வாசனைகொண்டோ ரொருவனுக் குறுமற்றுமோர் பலனியாதெனில் அவனுக்கு பயமென்பது முற்றிலு நீங்கிய வாழ்வு கிட்டுதலேயென்க. மானிடரிற் பெரும்பாலார் சதாகாலமு மேதேனுமோர் கவலை யல்லது மயக்கத்தாற் பயநிரம்பிய நெஞ்சினராய்க் காலங்கழிக்கின் றனரன்றோ! † இவ்வெமது தொழிற் கிடைஞ்சல் விளையுமோ, அல்லது அவ்வியாபார முதலியவற்றின் கூட்டு முடிவில் நஷ்டமடையுமோ, வென வோயா விசாரத்தால் அந்தோ! நொந்தலைகின்றனர். இவ்வகையினரின் மன நிலைமைகளையு மாங்குற்ற சங்கடங்களையு முற்றுநோக்கின் இவர்கள் பூமிக் குமலல்லல்களில் முக்கால்வாசி சம்பவிக்கப்போவதில்லை யென் பதுண்மையெனவே தோன்றும். ஆயினு மிடைவிடாக் கவலையால் நெஞ்சம் புண்ணும்படி வீணில் பெரும் வாதனை கொண்டோராய் இத்தன்மையர் பொழுதுபோக்கி வருகின் றனரன்றோ! இவ்வனந்த துன்பங்களிலும் மரணத்தால் பயமுறுதலென்பது மற்றியாவற்றினுங் கொடியதேயாகும்! மானிடகோடிகளிற் பெரும்பாகத்திற்கு இம்மரண பயமென் பது இடைவிடா தண்டிநிற்குமோர் பிரமராக்ஷசப்பேயேபோ

---

* கற்குநிலை கற்றுற் கருவியவிழா தருளாய்
நிற்கு நிலைகற்பதுவே நீதம் பராபரமே.

† தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
வெல்லையிலா வின்பமய மெய்துவனோ பைங்கிளியே.

அஞ்சமுகங் காட்டாம லாறுமுகங் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நாளோ?.

வாதைப் பிறவி வனைகடலை நீந்தவையன்
பாதம் புணையிணையைப் பற்றுநா ளெந்நாளோ?

லும், தலைமேல் வீழ்வதற்குத் தயாராய்ச் சதாகாலமுந் தொங்கிநிற்குமோர் மந்திரவாள்போலும், தாங்கமுடியாத துன்பமாய் அவரவர் மனங்களிற் றங்கிநிற்கின்றதென்பதை யறியாதார் யாவர்? *

இத்தன்மையதான வுணர்ச்சிகளி யாவும் நமது பிரமஞான வாராய்ச்சியுடையானுக்குச் சிறிதுமின்றி யற்றுவிடும்; ஏனெனில் நமக்கு புனர்ஜன்மமென்ப துண்டென்றும், இதற்கு முன்னமே நாம் பலதடவைகளில் நமது ஸ்தூலசரீரங்களை யகற்றி யெறிந்திருக்கிறோமென்று முண்மையி லறிந்துகொள்வோமாயின், நமக்கு மரணமென்பது நித்திரைபோலவேயாகுமென்பது புலப்படும். இரண்டு பகற்காலங்கட்கு மத்தியில் ஓரி ராக்காலம் வந்துசேர்ந்து நமக்கு வேலையின் ஓய்வையு மிளைப்பாறுதலையுங் கொணர்விப்பதுபோலவே, இவ்வுலக ஜன்மங்களெனப்படு மிரண்டு பகற்காலங்களுக்கு மத்தியில் ஓர் நீண்ட விராக்காலமெனத்தகும் நரகஸ்வர்க்க வுலகவாழ்வு நமக்கேற்பட்டு, பகலி லுழைத்தபின்னர் சிரம பரிஹாரத்தை யளித்து, அப்பால் ஜன்மமார்க்கத்திற் செல்லும்படி விடுப்பதுபோலிருக்கின்றது. ஆகவே தத்துவவிசாரஞ் செய்தவனொருவனுக்கு மரணமென்பது தனது ஸ்தூல சரீரமாம்போர்வையைச் சிறிதுகாலம் அகற்றி நிற்றலேதவிர வேறாகுமோ? தன்னாற் கூடியவரை தனதுடலெனுங் கருவியைத் தாங்கி நிற்ற லவசியமெனவே கருதிக் காலங்கழித்துவருவன். ஏனெனிலிவ்வுலகினு மனுபவங்களை யறிந்து சேகரித்துக் கொள்ளற்குத் தனுகரங்கள் அவசியமாகுமன்றோ! ஆயினும் இந்த ஸ்தூல சரீரத்தையு மகற்றிக்கொள்ளற்கு காலம்வரின், மிக்க வானந்தத்துடன் அதனைவிட் டப்பாற்செல்லற்குந் துணிவனன்றோ! ஏனெனில் ஸ்தூலவுலகிற் காட்டிலும் சூட்சும ஸ்திதிகளில் வாழ்வுமிகச் சிறந்ததுவாகுமென்பதி லையமில்லை. இனிப் பிரபஞ்ச பரிபாக மார்க்கத்தின் கருத்தெல்லாம் சகலமும் அபி

---

* கள்ளவங்கக் காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டு மெளியேன்
செப்பரிய முத்தியாங் கரைசேரவுங் கருணைசெய்வையோ?

விர்த்தி யடையவேண்டியதென்பது ஒன்றேயன்றி வேறன்றாதலாலும், அவ்வித மபிவிர்த்தி யடையும்பொருட்டே தானு மிவ்வுலகில் வாசஞ்செய்துவருவ துண்மையாதலாலும், இங்கு தனக்கேற்பட்டிருக்குங் காலம்வரை தானும் வாழ்ந்துவருவதே நியாயமென வுடன்படுவானாயினும், முடிவில் மரணம் வந்தடுக்கும்பொழுது அதற்குச் சற்றேனும் பயமடைவனோ? ஆகவே உண்மையை யறிந்துணரு மொருவனுக்கு இவ்வுலக வாழ்வைப்பற்றிய நினைவுகள் எவ்வளவு மாற்றமடைந்துவிடுகின்றனவென்பதைக் கவனியுங்கள்! உலகில் நாம் வாழ்ந்து வரும்பொழுது கொள்ளற்பாலதாய பெரு நோக்கமாவது குற்றத்தை தனக்குவியலைச் சம்பாதித்தலோ, அல்லது பேரதிகாரமுடைப் பெரும்பதவி யொன்றைக் கிட்டுவித்துகொள்ளலோ இவைபோ றவற்றுள் ளொன்றாகுமோ? ஆகாது? பின் னைப்பிரபஞ்ச நிர்மாணத்தி னுண்மையை யுணரின் அஃதை யாக்கியோனுங் கடவுளின் சங்கல்பமாகும் கருத்திற் கொவ்வுமாறு ஒழுகிவரலே யாகுமன்றே! இக்கருத்தை நிறைவேற்றுதற்கே நாமிங்கு வசித்து வருகின்றோம். * இஃதல்லாத தெதுவும் சமயம்வரின் நீக்கப்படலே வேண்டுமன்றே! ஆதலினிவ்வுண்மையைப்பற்றிய விஷயங்களைமட்டு நாம் சந்தேக விபரீதமறத் தெளிந்துகொள்வோமாயின் அப்பால் நமக்குலக சம்பவங்களைக் காணுமிடத்து பயமென்ப துண்டாகுமோ? †

---

* உற்றதுணை நீயல்லாற் பற்றுவே றொன்றுமிலேன்
பன்னுரு லகத்தோ டோடியாடிக்
கற்றதுங் கேட்டது மிதனுக் கேதுவாகும்,
கற்பதுங் கேட்பது மமையும், காணுநீத
நற்றுணையே, யருட்டாயே, யின்பமான
நாதாந்தப் பொருளே!

† அனந்த பதவுயிர்க டோறு முயிராயென்று
மானந்த நிலையாகி, யளவைக் கெட்டாத்
தனந் தனிச் சின்மாத்திரமாய்..............
அருட் கோயிற் றழைத்த தேவே!
அருள் பழுத்த பழச்சுவையே தேனே
யாரமிர்தே யென் கண்ணே யரியவான்
பொருளே கருணை நீங்காப் பூரணமாய்
நின்ற வொன்றே புனித வாழ்வே!
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந் தேசமும் வகுத்துக் கருவியாதி
விரிவினையுங் கூட்டி யுயிர்த் திரளை
யாட்டும் பொருளே! (தாயுமானவர்)

இவ்வாராய்ச்சியால் விளையு மற்றுமோர் பலனியாதெ னில் மானிடர் தத்தஞ் சமயமுறையி னொழுக்கங்களை முழு மையும் அனுட்டிக்க முடியாமையினாலும், அனைவரும் சிறிதா யினு மவற்றினின்றும் வழுவியே வந்திருப்பார்களாதலாலும், ஆபத்துக்கள் தமக்கு நேருமேயென விசாரங்கவலைகளைப்படு தலை யொழித்துநிற்றல் கூடுமென்பதே யென்க. நம்மனோரில் உத்தமகுணம் வாய்ந்தவருள்ளும் பலர் தமது வாழ்நாட்க ளில் சமயவனுட்டானமாதிகளைக் கவனியாது நின்றமையின், தமக்கு அந்தியகாலத்தில் எவ்விதமேனும் ஆபத்துக்கள் விளை யுமோ, அல்லது தம்மைக் கடவுளுங் கைவிட்டு அனாதர்களா யாக்கிவிடுமோவென, வந்தரங்கத்திற் பயங் குடிகொண்டவர் களாகவே நிற்கின்றனர். இவர்களுக்குத் தம்மை யறியாத விதமாய்த் தமயிடமேதேனுங் குற்றங்குறைகள் தத்தம் மதா சார முறைகளின் வழியே யேற்பட்டுவிடின் அதற்கென்செய் வோமெனும் ஏக்க மிடைவிடாது நெஞ்சில் வேரூன்றி நிற் கின்றதே! *

நாமனைவரு முடிவில் மேலாய பதவியடையும் வண் ணம் அபிவிர்த்தியடைந்து வரல்வேண்டுமென்பதுவே கடவு ளின் சங்கற்பமென் றுணரப்பெறின், மேலே கூறப்பட்ட சகல பயாதி சஞ்சலங்களு மறவே நீங்கி யோடிவிடுமன்றோ! நாமனைவரும் அபிவிர்த்தியடைந்தே தீரவேண்டியது நிச்சய மாகின்றமையின் அவ்வித மேற்பட்டிருக்கும் பிரபஞ்சத்தின் நியதியை நம்மால் மீறுதற்கு முடியுமோ முடியாதாதலின் நம க்கு நேருஞ் சகலசம்பவங்களு நமதுபகாரத்திற்கெனவே யுண் டாகின்றன வென்பதுவும், நமது க்ஷேமம் அல்லது அபிவிர்த்தி குன்றுமாயின் அதற்கு நாமே காரணமாதல் வேண்டுமேயன்றி வேறுகாரணமின்றென்பதுவும் நமக்குத் தெள்ளிதின் புலப்படும். இவ் வுண்மையைமட்டும் யதார்த்தமாய் நாமுணருவோமாயின், நமது வாழ்வு எவ்வளவு மாறுபாடடைந்துவிடு மென்பதை

---

* போனநாட் கிரங்குவதே தொழிலா யிங்ஙன்
பொருந்துநா ளத்தனையும் போக்கினேன்
என் ஞான நாயகனே! — தாயுமானவர்.

யுன்னுங்கள். நமக்கு ஆபத்துக்கள் நேர்ந்து க்ஷேமம் வரு மோவெனும் பயம் முதலில் நீங்குகின்றது: பின்னர் நிர்ப் பயமாய், நமக்குக் கிட்டு மெக்கடமையையும் நம்மாற்கூடிய மட்டு முசிதமானவழியில் நாம் நிறைவேற்றி வருவோமாயின், அப்பால் நமக்குக் கெடுதல் நேருமோவெனுங் கவலைகளை நாங் கொள்ள லவசியமாகாது. இவ்விதம் நாங்கொள்ளும் நம்பி க்கையின்படியே எவ்வித சம்பவமும் முடிவில் நமக்கு க்ஷே மத்தையே வருவிக்கு மென்பதிற் றடையேயில்லை.

ஆனால் "தன்னைத்தானறிதல்வேண்டும்" என்னும் மேற் றிசைக் கிரேக்க தேசத்தினரது பழமொழிக்கிணங்க வொவ் வொருவனும் தன்னைச் சோதித்துக்கொண்டு தன்னிடமுள்ள குறைகளியாவற்றையு மாராய்ந்து அறிந்துகொள்ளல் கடமை யன்றோவெனின், இஃது அவசியமே யாயினும் இதையு மளவு கடந்து யோசனையில்லாது நாஞ்செய்துகொள்ளாமல், உசித மானமட்டி லனுசரித்து நிற்றலே யழகாகும். இன்றேல் சிறு செடிகளை நட்டுத் தோட்டம்போட்டு விளையாடுஞ் சிறுவர் அச்சிறு செடிகள் கொஞ்சங் கொஞ்சமாய் வளர்ந்து வரு கின்றனவோ எனச் சோதனை செய்யப்புகுந்து, அவற்றின் வேர்களைப் பிடுங்கி யடிக்கடி யுற்றுநோக்குவது எவ்வளவு அறிவீனமோ அவ்விதமே நமது பழக்கமுமாகிவிடுமன்றோ!*
இவ்விதமே நற்குணமுடையோரினும் பெரும்பாலார் தத்தங் கடமைகளை யொழுங்குடன் நிறைவேற்றியும் பிறர்க் குபகாரங் களைப் புரிந்தும் வருவதோடு திருப்தியடைந்து காலங் கழிக்காமல், தமது சொந்தவபிவிருத்தி யெவ்விதம் நடந்

---

* சஞ்சலமாய்ப்புத்தியை நாட்டாதே, யோராதே யொன்றையுநீ
முன்னிலைவையாதே யுள்ளபடி முடியுமெலா முள்ளபடிகாணே
உள்ளபடியென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டாகிட் களங்கமதியாகிக்
கள்ளமனத்துறவை விட்டெல்லாந் துறந்ததுறவோர்
கற்பித்த மொழிப்படியே சுங்குல்பகலற்ற
வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப்பொருளாய்
விரவியெடுத்தெடுத்து விள்ளம்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையுமாகிக்
கும்பிட்டுச் சகம்பொய்யெனத் தம்பட்டமடியே! (தாயுமானவர்)

நேருகி வருகின்றதோ வென்பதை யறிந்துகொள்ளக் கவலை கொண்டவர்களாய், சமயந்தோறுந் தங்களைக் கடுமையாகச் சோதித்துக்கொண்டு தாங்கள் சம்பாதித்துக்கொண்டிருக்கும் ஞ்ஞானமாதி திரவியங்களை யழித்துவிடுகின்றனர். இத்தன்மையாளர்க்கு, தாம்மட்டு நல்வழியில் அசையா நோக்கங் கொண்டுறுதியுடன் சென்றால், பின்னர் யாவற்றையுந் தாங்கிச் சம்ரக்ஷித்துவருங் கடவுளின் சக்தி தம்மையு மிடைவிடாமல் மிருதுவாய் அப்பாற்செல்லும்படி நடாத்திவருமென்னு முண்மையில் நிச்சயமான நம்பிக்கை கிட்டாது செல்லுகின்றது.

ஆதலின் நாமனைவரும் பிரபஞ்ச முழுவதையு யடக்கின்டுவரும் பரிபாக மகா சமுத்திரத்தின் அலைகளே யெனவும், யதார்த்தத்தில் கடவுளாஞ்சகத்தின் பிதாவுக்கு வாய்த்த குழந்தைகளேதவிர வேறன்றெனவுமறிந்து கொள்வோமாயின், நாமெல்லோரும், மற்றும் பிரபஞ்சத்திலுள யாவுமே ஒன்றோ டொன்றிணை பிரியாச் சோதர பாவத்திற் குள்ப்பட்டனவே யாவோமெனும் பெருங்கருத்து, கேவலங் கவிவாணர்தம் பாவனையாற் பாடிய பாட்டன்று, அல்லது எப்பொழுதோ வினிவருங் காலத்தி லோர்நாள் சாத்தியமாகக்கூடிய சம்பவமாகுதல் கூடுமென சந்தேகத்திற் குட்பட்டதோர் விஷயமுமன்று, பின்னை இந்நாளில் இந்நிமிஷத்தில், எவ்விடத்திலும் உண்மையைக்காணு முயர்திருஷ்டி படைத்தோரால் காண்டற்குரிய பரமார்த்த சத்தியமே தவிர வேறாகாது என்பதை யுள்ளங்கை நெல்லிக்கனியென நாம் தெளிந்துகொள்வோமன்றோ! * இவ் வுண்மைகொண்டே அதை யபரோக்ஷமாய் அனுட்டித்து விளக்கிக்கொள்ளுதலையே நமது பிரமஞான மகாசபையின் நோக்கங்களில் முதலாவதாய் வைத்தி

* பொருளை நின் பூரணமேவிட்டகாலம்
போக்குவரவுண்டோ தற்போதமுண்டோ
விருடானுண்டோவல்லால் வெளிதானுண்டோ
வின்பமுண்டோ, துன்பமுண்டோ
யாமென்றுண்டோ. (தாயுமானவர்)

ருக்கின்றனர். "பார்முதலண்டப் பரப்பெலா நிருவி"ய பரமசத்தியமாய் விளங்கு மிச்சகோதரபாவம் மட்டும் நமது புத்தியில் நிலைபெறுமாயின் அப்பொழுது நமதுலகவாழ்வை மதிக்கும் மதிப்பு மிகவுமாறி, எப்பொருட்களையும், தன்னை மறந்த பார்வையுடன் கிரஹிக்கும் சுபாவமு நமக் கேற்பட்டு விடு மன்றோ! சாமானியரான மானிடர் எவற்றையும் தத்தமக்கவை பிரயோஜனப்படும் வழியிலேயே பாவித்து மதிப்பிட்டுவரும் பழக்கமுடையவர்களன்றோ! ஏதேனுமோர் சம்பவத்தைப்பற்றிக் கேள்விப்பட்டவுடன் அதைப்பற்றி அவர்களது நெஞ்சிலுண்டாகு முதனினைவு அஃது தங்களைஎவ்விதம் பாதிக்குமோ என்பதுவே தவிர வேறிருக்குமோ! இவ்வாறு நினைந்து தீர்மானஞ்செய்து கொண்டபின்னரே அதனால் தனது கோஷ்டியல்லது தம்மொடுசேர்ந்த கூட்டத்தாருக்கெல்லாம் பொதுவாய் அதனுல் விளையும் பலாபலன்களையாலோசிப்பார்களேயன்றி வேறன்று. இவ்விதமல்லாது நமது பிர்மஞான வாராய்ச்சி கற்பிப்பதியாதெனில், சகலமானுடமாதி ஜந்து சமூகத்தின் யதார்த்தமான க்ஷேமத்தையும் ஒன்றேயாதலால், எவனும், பிறன் நஷ்ட மல்லது துக்கமடையும்படி செய்தலால், தான் தனியே க்ஷேமமடைதலென்பது ஒருபோழ்து முடியாதென்பதே; இவ்வித வுபதேசமும விளையாட்டாய் அல்லது மூடபக்தியுடன் இப் பிர்மஞானத்தில் விளக்கப்பட்டிருப்பதில்லை. பின்னை சத்தியமானதும, விசேஷ பிரயத்தினத்தா லொவ்வொருவரும தனக்கே ருசுவாக்கிக் கொள்ளற்பா லதுமானதோ ருண்மையேயென வற்புறுத்திக் கூறப்பட்டிருக்கின்றதெனக்கொள்க.

மானிடருட் பெரும்பாலார் பிறரைத்தாம் மோசஞ் செய்வதாற் றமக்கு விசேட லாபம் கிடைக்குமெனும் பொய் நம்பிக்கை யுடையரா யிருக்கின்றனர். சமயம் வரும்பொழுதெல்லாம் அவ்விதம் லாபங் கிடைப்பதிற் றடையேயில்லையென்பதைப் பிரத்தியக்ஷமாய் நிரூபித்தற்கு, தாமக்கிரம வழியில் சம்பாதித்துக்கொண்ட ரூபாய் அணுக்களை எவரு மாக்ஷேப்பிக்க முடியாத ருசுக்களாக வெடுத்துக் காட்டுகின்றனர். இவ்வியற்கையினரா மாந்தர், மிக வற்ப திருஷ்டியுடன், இவ்விஷயத்தி லுண்மையை அரைகுறையாகவே கிரஹித்து, அதன்

கணுனுள்ள பாரமார்த்திகமான அம்சங்களை யுபேக்ஷித்து விடு கின்றனர். என்புதோல் நிறைந்த போர்வையா மிந்த ஸ்தூல வுடம்பைக் காட்டிலும் உயர்ந்தது மேன்மையுமான அம்சங்க ளுளவே யன்றோ! ஆதலின் இப்போர்வையாம் பாஹ்ய அம் சத்திற்கு எது பாதகமோ அது முக்கியமாகுமோ, அல்லது இப்போர்வையைத் தாங்கியவனுகும் மானிடனுக்கு எது அன ர்த்தகரமோவது நாங் கவனிக்கற்பாலதோ, ஆலோசியுங்கள்.

ஆதலால் ஒரு சம்பவம் அல்லது விவகாரம் நிகழு மாயின் அதனுல் நேரும் சாதக பாதகங்கள் ஸ்தூலசரீரத்தை எம்மட்டில் சம்பந்திக்குமோ அம்மட்டும் நமது கவனத்தை செலுத்தி, அதன் லாப சேதங்களையே பொருட்டாகக்கொ ண்டு, நமது மேலாகிய அம்சங்களில் ஏற்படும் பலாபலன்களை யுன்னுமல் நிற்பதும் அழகாகுமோ ? யோகிகளின் உயர்திருஷ் டியாற் செய்யப்பட்ட சோதனைகளில் மேற்கூறிய வஞ்சனை யாதி கலந்த தீப காரியங்கள் முடிவில் பரபார்த்த மனிதனும் ஆன்மாவை சம்பந்தித்து அதற்கே குறைவைத்தந்து அதன் அபிவிர்த்தியையும் தடைசெய்து விடுகின்றது என்பது கண்டு பிடிக்கப் பட்டிருக்கின்றது. ஆதலின் உண்மையை யுணராத மனிதனை தனது தீப செயற்களால் கிடைக்கக் கூடியதும், வெளிக்குமட்டும் லாபம்போற் ருேன்றுவதுமான, அல்ப சுகத் தையே கவனித்து தனது அபிவிர்த்தியையே முற்றிலும் கெடுத்துக்கொள்கிரு னென்க.

இதனுல் முடிவாய்ப் பெறப்படுவது யாதெனில், எவனுக் காவது கெடுதியைவிளைவிக்கும் விஷயம் எதுவாயினும்இன்னும் மற்றெவனுக்காவது நன்மையாக முடியவே முடியாது. ஏனெ னில் தீமையென்பது ஒருவனுக்காவது ஏற்படுமாயின் அஃது அவனெடுமட்டும் நில்லாமல் அவனைச் சூழவிருக்கு மனைவரை யும் பாதிக்கின்றது. ஆகவே இவ்விஷயங்களை கூர்மையுடன் விசாரித்துத் தெரிந்துகொள்ள முயலுவோன் எவனும், பிற னொருவனுக்கு நஷ்டம் உண்டுபண்ணும் எதுவும் மற்று மொ ருவனுக்கு லாபமாய் முடியுமெனல் அமையாது எனவும், ஆதலின் பிறருக்கும் எது க்ஷேமமாய் முடியுமோ அதுவே தன க்கும் க்ஷேமமாகும் எனவும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல்.

அழித்து கொள்ளுகிறான். இவ்விதமே ஆன்ம பரிபாகத்தின் அதனுடைய அபிவிர்த்தியும் தனொருவனுக்கே ஏற்படுமென் பதின்றி, மற்றுமுள யாவருக்கும் தனக்குமாய் பொதுவிற் கிடைக்கும் க்ஷேமமாகவே சம்பவிக்கும் எனவு மிவன் கண்டு கொள்ளுகிறான். இவ்விஷயத்தையே பின்னர் நமது சிந்தனை யல்லது சங்கற்பத்தின் வல்லமை யென்பதைப்பற்றி யான் பேசப்புகுமிடத்து இன்னு மதிகமாய் விரித்துக் கூறுவேன்.

ஆகவே சிலமெய்ஞ்ஞானமாதி பெரும்பேற்றை யொரு வன் அடையின், இஃது உண்மையில் அவனுக்கே கிடைத்த தோர் பாக்கியமே யாயினும், இதனால் இதர மானிடற்கு ஏதே னுமோர் குறைவு நேரிடுமென்ப தில்லவேயில்லை, பின்னை மற்ற வர்க்கெல்லாம் இதனால் உறுதியும் க்ஷேமமும் கிட்டுமேயன்றி வேறன்று; ஏனெனில் சர்வ மனுஷ்ய சமூகமும் ஒன்றோடொ ன்று இணைபிரியாது சேர்ந்துநிற்கு மோர் பிழம்பே என்பது முடிவா யான்ம திருஷ்டியில் காணப்படு முண்மை யாதலின், மின்னையன்ன பொய்வாட்கை நிலைபெற்ற இவ்வுலகினும் அறிவு டையோரால் தெளிந்து போற்றற்பாலதான உண்மையாவது, ஒருவன் தனக்கு க்ஷேமம் வேணடின் பிறர் யாவருக்கும் எது க்ஷேமமாகுமோ அதையே நாடல் வேண்டுமேயொழிய மற்ற வர்க்குத் தீமையாய் முடியும் எவ்விஷயத்தையாவது கோருவா னாயின், அஃது அவனுக்கும் தீமையாகவே முடியுமென்பதே. ஆதலால் ஒருவனது ஆன்மார்த்த அபிவிருத்தி எவ்வளவு அற் பமாகவாயினும் நிகழுமிடத்து அஃது அவ்விதமே சகல மனு ஷ்ய வர்க்கத்திற்கும் கடுகளவாயினும் அபிவிருத்தியைத் தரு வதற்கு உதவு மென்பதில் சந்தேகமில்லை. இக்காரணத்தால் ஆன்ம இயற்கையின் தெளிவாகிய ஞானத்தைப் பெறவேண்டி, ஒருவன் உயர் நோக்கங்கொண்டு முயலுங்காலை, அவன் படும் பாடுகள் துன்ப மத்தனையும் தனது சகோதரர்களாய மானி டர்க ளனைவர்களின் துன்பங்களான தாங்கொணு மூட்டையை சிறிது சுமந்து வரத்துணியும் துணிவேயாகு மாதலால், அவ்வ ழியில் முயல்வோனும் அவனொருவனுக்குமட்டும் க்ஷேமமாய் முடியுமென்ப தில்லையன்றோ!

மேற்கூறியபடி சர்வ மனுஷ்ய வர்க்கமும் இணைபிரி யாப் பிழம்பாம் சகோதர பாவத்திற் குட்பட்டிருப்பதை, அவ

[illegible] [illegible]களை நீக்குவதற்கு பலவித [illegible], [illegible]. [illegible]ண்ட, உபாயங்களைச் சாதித்த பின்னரும் ஐயப்பெருப்பல் மயங்கி அலைபு மாந்தருட் சிலர் வேறுவழியில்லாமல் [illegible] மூடங்கி நிற்பதற்கென வுபதேசிக்கு முண்மையே யென வுணராமல், பின்னை, எதார்த்தத்தில்ப் பல வழிகளாலும் உண்மை யுணர விரும்புவோர்கள் விசாரித்துத் தெரிந்துகொள்ளப்புகின் அவர்கள் மனதில் முடிவாய்த் தோன்றும் தீர்மானம் அல்லது விளக்கமே இதுவாகுமென அறிந்துகொள்ளல் வேண்டும்.

இவ்விதமிவ்வுண்மையைப் பசுமரத்தாணிபோல் நம்ம [illegible]ங்களில் நாட்டிக்கொள்வோமாயின், நம்மைச் சூழ்ந்திருக்கு மெப்பொருட்களையும் நாம் விரோதித்து மதிப்பிடும் நோக்கம் எவ்வளவுதூரம் மாறுதலடைந்துவிடு மென்பதை யான் கூறவும் வேண்டுமோ? எப்பொழுது மாறுக் கருணையுடன் எதிர்ப்படு மெதற்கு முபகாரத்தையே செய்துவருந் தன்மையராய் நாமாகி விடுவோமன்றோ! ஏனெனில் இதர மானிடர்க் குண் [illegible]மையில் விரோதமா யேற்படு மெச்செய்கையும் நமக் குசித மா[illegible] தெங்ஙனம்? ஆதலின் யாவரிடத்திலும் பொறுமையுந் தண்ணமர் சாந்தமு முடையோரா யொழுகி வருதலு நமதியற்கையாகிவிடும். நாமமைதியும் பொறுமையு மில்லாதிருத்தலும் அப்பொழுது வாய்க்குமோ? ஒருவன் நல்லோரு யுண்மையொடு காலங் கழித்துவரின், அவனது கொள்கைகளு நம்பிக்கைகளு மெவ்வாறிருப்பினு மென்னை? இவ்விதமே, சாமானியனு மொருவனுக்கு பிறரது நடையுடை பாவனைகளில் துவேஷமுண்டாவது சகஜமே யாயினும், மேற்கூறியபடி பிரமஞான மென்ப தின்னதெனத் தெரிந்தார்க்கு இத்துர்க்குணம் வாய்த்தலமையுமோ! ஞானமுடையாரிட மேற்படும் நன்மை தீமை யிவையெனும் வரம்பு, அறிவிலார்க் குளதினும் சால வுயர்ந்ததுவே யாயினும், தன்னினுந் தாழ்ந்த வுணர்ச்சி யுள்ளானிடம் தான் மேலான கருணையையே காட்டி வருவதற்குக் கடமைப்பட்டவனாகிறான். ஏனெனில் தன துயர்ந்த வனுபவங்களால், பாவங்களைப் புரியுந் தருணங்களில் அவற்றின் வசத்திலகப்படுவோன் மாட்டு அப்பாவச் செயல்கள் கூட்டு மாயைகளையும், அவற்றா லவ்வச் சீவர்கள் படும் பாடுகளையுங், கூர்ந்தறிந்துகொள்ளுந் திறமை யுடையவனாய்

நமது அறிவும் விளங்கலா னென்றறிக. ஆதலின் இவற்றை யறியாத வொருவனைக் காட்டினும் தாழ்ந்தோரிடம் அறிந்தவன் விசேடக்கருணையும் அன்பையுமே காட்டி வருவனன்றோ!

இம்மட்டோ? இன்னு மிவ்விதமாய கருணை, அமைதி, பொறுமையாதி நற்குணங்களையுந் தாண்டியே நமது ஞானியு மப்பாற் செல்லுவனெனக் கூறலுந் தகும். அஃ தெவ்வித மெனின், மேற்கூறிய நற்சீலமொடு மவன் பிற னொருவனைக் கண்டு துன்புறுத்தாமல் நிற்பதுமட்டுமோ செய்வன்? அன்று: பின்னை யவனுக்குத் தானேதாவ துபகாரஞ் செய்வதுங் கூடு மோவென வாலோசிப்ப னென்பதே. தாயினிடம் பேரன்பு பூண்ட குழந்தையொன்று அவ்வன்னைக்குத் தானுபகரித்தலை விரும்பி, அவள் ஆசைகொண்ட காரியத்தையோ, அல்லது அவளுக்குத் திருப்தியைத் தருவதாகு மொன்றையோ, இல் லாவிடின் இடைஞ்சலை நீக்குவதாகிய விஷயமொன்றையோ முடிப்பதற்கு, ஏற்ற சமயத்தை எதிர்பார்த்து நிற்குமன்றோ! இவ்விதமே பிரமஞானத்திற் சிந்தை வைத்தவனும் பிறரை நோக்கி யுதவிபுரியுஞ் சந்தர்ப்பத்திற் காசைப்பட்டு வருத லுமாகும். இவ்வகையினன் தான் பிறரைச் சந்திக்குந்தருண மொவ்வொன்றும் தானவர்க் குபகாரம் புரிவதற்காகத் தனக் குக் கிட்டியசந்தர்ப்ப மாகுமெனக்கொள்வன். பிறரொடு எவ் விதம் எத்தருணத்தில் சந்திப்பு நேரிட்டாலும் அவ்வவ் விடங்களிலெல்லாம் ஏதேனு மொரு பிரயோசனத்தை ஏற் படுத்திக்கொள்ளும்படி யவனை இவ்வுயரறிவி னாராய்ச்சி செய் துவிடுகின்றது. இச்சமயங்களி லவன் பிறருக்கு ஒரு கடுகள வாவது உபகாரத்தைச் செய்தல் அல்லது யோசனைகூறல் இவற்றைப் புரியுந் திறமையடைகிறான்.

இதனு லறிவுடை யொருவன் சதாகாலமும் தன தபிப் பிராயங் கொள்கைகளைப் பிறர் கொள்ளல் வேண்டுமென அவ ரைத் துன்புறுத்துவா னென்பதன்று. பின்னை யிவ்விதம் பிற ரை ஹிம்சித்து வருதல் அறிவிலாரது குற்றங்க ளுண் முக்கிய மானதாகுமென அறிந்துகொள்வனென்க. சாமானியரா மானி

னம் செய்ய நேர்ந்திருக்கும் இவ்விஷயம் உசிதமோ அல்லது சிதமன்றோ, இக்காரியம் ஜகத்பரிபாலன மகா மார்க்கத்திற்கு இடைஞ்சலை விளைவிக்குமோ அல்லது உதவியைப் புரியுமோ, என்னவும் தனக்குள்ளேயே விசாரித்துணர்ந்து கொள்ளுகிறான். இவ்விதமே ஒரு இச்சையாவது எண்ணமாவது தன்னிடம் தோன்றிடின், அதையும் அவ்வாறே சோதித்துத் தனக்கு உபயோகமுள்ளது அல்லது அபாயகரமானதெனச் சடுதியில் தீர்மானம் செய்துகொள்ளுகிறான். இந்நினைவல்லது உணர்வு, உண்மையில் அதிகமதிகமாய் அநேகருக்கு உபகாரமானதாய்முடியுமாயின், அது உசிதமானதாகும். அவ்விதமின்றி எச்செந்துவின் அபிவிர்த்திக்காவது விகாதமல்லது இடையூறைத் தருமாயின் அஃது உசிதமகாது. அக்கணமே அதைத்தானும் நீக்கவேண்டியது அவசியமாகும். இவ்விதமே பிறர்காரியங்களிலும் உசிதானுசிதமானவற்றை இவன் தீர்மானம் செய்து கூறவேண்டிவரின், அக்காரியம் மேலே கூறியவண்ணம் உத்தமமானதாயின் அதை நல்லதெனத்தானுஞ் சம்மதித்து அங்கீகரிப்பன், இல்லாவிடின், தன்க்குச் சம்மதமில்லையெனத் துணிவாய்க் கூறுபவனுவன்.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால் நாம் உணரவேண்டியது யாதென்னில், இவ்வண்ணம் உண்மையை யறிந்தொழுகுவோனுக்கு தந்நயமல்லது, சொந்த லாபமென்பது எக்காரியத்திலும் தோன்றுதற்கு அவகாசமே கிடையாதென்பதே. ஏனெனில் எப்பொழுதும் உலகக்ஷேமத்தையே இவன் கருதி நிற்பவனுகிறான். இஞ்ஞாபகமட்டும் இவனது நெஞ்சிற் குடிகொள்ளுமாயின், அப்பால் இவனுக்கு மனச்சஞ்சலமல்லது "எக்காரியத்தை எப்பொழுது செய்வது" எனும் தீர்மானமின்மையாவது நிகழாது. மனிதபரிபாலகம் நடந்தேறுதற்குக் காரணம் கடவுளது இச்சையல்லது சங்கற்பமே யாதலின், அப்பரிபாகத்திற்கு எது உகந்ததாகுமோ அதுவே கடவுளது இச்சைக்கு பொருத்தமானதாகும், அதாவது உசிதமானதாகும். அப்படியே அப்பரிபாகத்திற்கு விரோதமாகியது, அல்லது சற்றேனும் அதைத் தடைப்படுத்துவது எதுவோ அஃதெல்லாம், நீண்டகால

பாரம்பரையின் வழக்கமுடையதாயினுஞ்சரி, அல்லது மானிடரிற்
பெரும்பாலாரது போற்றுதலும் அபிமானமும் உடையதாயினு
ஞ்சரி, தீயதுவேயாகும். இனிக்கடவுளது இச்சையல்லது ஜகத்
தின் நியதியே மிகவும் மேன்மை பொருந்தியதெனக் கொள்ள
வேண்டின், உலகினில் எப்புறம் நோக்கினும் இந்நியதிக்கு
விரோதமே நிகழுவது உண்மையாதலின், எப்படிக்கடவுளது
இச்சையையே நாம் தழுவி நிற்பது நியாயமாகுமென ஓர்வினு
எழுமாயினும், பிரபஞ்சமுழுவதையும் அடக்கியாளும் மகாநிய
தியாம் ஒழுங்கிற்கு, ஆங்காங்கு அறிவின்றி அதைமீறி ஒழுகும்
மனிதர்களின் அற்ப இச்சைகளும் ஈடாகுமோ? ஆதலின் ஏக
ந்நியதிக்கிணங்கி யொழுகுவதால், நமக்கு உடனே க்ஷேமலாபங்
கள் தோன்றாவிடினும், அதைப்பார்க்கும் அயலார் நம்மை உலகி
யலறியாதவரெனப் பழித்துவரினும், உண்மையில் நாளடை
வில் நமக்கு ஜயமே கிடைக்குமென்பதிற் றடையில்லை. ஆத
லின், நமதியற்கையையும் கருத்தையும் நன்குணராத உலக
மாந்தர் நம்மீது கூறிவரும் நிந்தனைகளை யெல்லாம் நாம லட்சி
யம்பண்ணி நிற்றல் அழகாகாது. ஏனெனில் நம்முட்டோன்றும்
அறிவுகொண்டு நாம், உலகமாதிகளை யணிவகுத்து நடாத்திவ
ரும் ஒழுங்கின் விவரங்களைக் கண்டறிந்து கொள்வதால், நாம்
சரியானவழியில் நமது கடமைகளை நிறைவேற்றிவரக் கூடிய
வர்களாயினமையின், இவ்வறிவு கிடைக்கப்பெறாத வேனைய
மாந்தர் நம்மீது கொள்ளுந தப்பபிப்பிராயங்களை நாஞ்சற்றும்
மதிக்கவே வேண்டியதில்லை.

இனியாமிந்நூலினாரம்பத்தில் கூறிய பெரும் விஷயங்
களுளிரண்டாவதான "மானிடனும் நாசரஹிதனேயாவன்"
எனுங் கருத்தை யுள்ளபடி யொருவனறிந்துணர்வதால், அவ
னுக்குண்டாகுமாலோசனைகளும் நோக்கங்களும் மிகவும் விசேட
முள்ளவைகளாகவே யிருக்கின்றன. ஏனெனில் மானிடனென்
பான் உண்மையில், அவனது ஆன்மாவே தவிர இவ்வெளியுலக
த்திற்றோற்றமுடைய அவனது ஸ்தூலசரீரமாகானென்னும் நம்பி
க்கையானது நம்மவருட் பெரும்பாலோரின் அபிப்பிராயத்திற்கு
விரோதப்படுமன்றோ! நமது பிரதிதின வாழ்க்கையில் நாமிவ

டர் சம்பிரதாயமுறை, இராஜநீதி யல்லது ஜனசமூக வர்த்தமானங்களின் திருத்தம், மிவ்வகை யுலக விவகாரங்களி லேதேனு மொன் றை கொஞ்சம் நிச்சயமா யறிந்துகொண்டால், உடனே மற் றவர்களிட மதையே நாட்டி ஸ்திரப்படுத்தி யவர்களும் தம் ஸம்ப்ரோ லனைகளைக் கொள்ளல் வேண்டுமென வற்புறுத்தி யுவர்களை ஹிம்சிப்பது வழக்கம். இவ்விதமின்றி மேலே கூறி யபடி உயர்ந்தாராய்ச்சி யுடையோன் இவ்விதம், பிறரை ஹிம் சித்தல் தஞ்சத்தியை வீணில் பாழுக்கிறைத்த லாகுமென வுணர்ந்து வாததர்க்க மாதிகளிற் றலையிடான். ஆனால் இவ னிட மபிப்பிராய மல்லது யோசனை கேட்போருக்கு தானறிந் தவற்றை விசேடமா யெடுத்துரைக்கத் தயாரா யிருப்பன். ஆயினும் வேறு வேறு நினைவுக ளுள்ளாரைத் தன்வழியிற் றிரு ப்பி மாற்றிவிட வேண்டுமெனுந் துர்ப்புத்தியை யிவன் கொள் ளுவதில்லை.

இத்தன்மையாளனுக்கு எவ்வித வுலக விவகாரங்களி லும் மேலே கூறிய பரோபகார சீலமே இயற்கையாகி விடுமே ன்றோ! இஃது தனதுசகோதரராம் மானிடரொடு பழகும் பொழுதுமட்டுமன்று, பின்னைத தன்னொடு இவ்வுலகினில் வாழும் அனந்தமான மிருகங்களின் கூட்டங்களினொடு கலக் கும் பொழுதுங்கூட இவ்வித வுபகாரத்தன்மையையே வெளிக் காட்டி வருவன். இம்மிருகங்களில் சில பல நம்மொடும் மிக நெருங்கி வாழும்படியாய் நமது வீட்டிலும் நாம் நடமாடு மிதர ஸ்தலங்களிலும் பழக்கப்பட்டிருக்கின்றனவன்றோ! இத னால் அவ்வம் மிருகசாதிகளுக்கு நாம் உதவி புரிவதற்கேற்ற சந்தர்ப்பங்களே நமக்கு வாய்த்திருக்கின்றன வன்றோ! மிருக சாதிகளும் நம்மொடு பரமனது சிருஷ்டியினின்றும் பிறந்த வஸ் துக்களே யாதலின் நமது சகோதரர்களே யாகும். இவை இவ்வுலகினில் நமக்குப் பிற்பட்டு ஜென்மமடைந்தவைக ளாத லின் நம்மிளைய சகோதரர்களாகின்றன. ஆயினும் அவைகள் நாட்டும் நின்றியக்கம் செய்யும் சேதனமாம் வாழ்வு, சிறிது நம்மினும் குறைந்த பக்குவ முடையாதும், நமக்குப்பின்னா னெம்பியதும்மான அம்சமேயாயினும், உண்மையில் கடவுளுடை

யதுவேயாகும். ஆதலால கடவுளட மருமைத ஞானருபமும் மிருகவர்க்க மனைத்தும் நமது சகோதரர்களேயாகும். ஆகவே அவைகளிடம் நாம் காட்டிவரவேண்டிய சோதரபாவம் ஆகும் கடமையும் ஒன்றுண்டு. அதாவது, அவ்வகளுடன் கலந்து காலம் கழிக்கும்பொழுதெல்லாம் அவைகளுக்கு உபத்திரவம் நேராமல் க்ஷேமமே வாய்க்கும வண்ணம் நமது நினைவு செயல்களை நடத்திவருதலே யாமென்க.

இப்பிரமஞானமாம் விஷயத்தை நாம் ஆராயுங்கால் முதன்முதல் அதைப்பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டியது யாதெனில், அஃது அத்தனையும் சகல மானிடர்க்கும் பொதுவான நல்லுணர்வாம் அறிவினால் தெளிந்துகொள்ளற்பாலதான விவேகமேயன்றி வேறன்றாதலின், நாம் அறிந்துகொள்ளக் கூடியமட்டில் நமக்கிது எடுத்துரைக்கும் விஷயங்களாவன: பரமன், ஜீவாத்மா இவர்களைப்பற்றியும் இவர்கண் மத்தியில் நிகழும் சம்பந்தங்களைப்பற்றியும் உள்ள உண்மைகளை விளக்கி, அவைகளைக் கூர்ந்து ஆலோசித்தபின்னர், அவற்றினிடம் நமது கவனத்தைச் செலுத்தி, நமதறிவிற்கு ருசிவுமாறு நம் பிரதிதின வாழ்க்கையில் அவற்றை யனுஷ்டித்துவரல் வேண்டுமென்பதே யென்க. யாவரும் தம் அறிவினால், உலக பரிபாகத்தை நடாத்திவரும் நியதியின் விவரங்களைச் செவ்வையாய் அறிந்துகொண்டு, தத்தம் நடத்தையில் அவற்றை அனுஷ்டித்துவரல் வேண்டுமென்பதொன்றே இதன் கோட்பாடாகும். ஆயினும் இது அற்பமான காரியமல்ல. பின்னை, இதை யறிந்துணரும் மானிடரின் இயற்கையே மாறினாதன இயல்பை அடைந்துவிடுகின்றது. இவனது உண்ணோட்டம் இவ்விதம் மாறுபட்டதற்கிணங்க இந்நாள் முதற்கொண்டு இவன், தனது செயல்கள் முதல் உணர்ச்சி நினைவுகள் ஈறாக, யாவற்றையும் மாற்றிக்கொண் டவ்விதமே பிறருலகில் தனக்கு வாய்க்கும் சம்பவங்கள் முதலிய அனைவற்றையும் மாறுதலடைவிக்கிறான்.

தனக்கு வாய்க்கும் எவ்விஷயத்தையும் மேலே கூறிய விதமான சோதனையிற் பிடித்துத் தெரிவித்துக்கொள்ளுகிறான்.

தெனில், பகிரங்கமாய்த் தோன்றுமிந்த ஸ்தூலசரீரம் மட்டுமன்று பின்னுஞ் சூட்சும சூட்சுமமாய உடம்புகளும் நமக்குண்டென் பதும், இந்த ஸ்தூலத்தாலெப்படியோ யவ்விதமே யவ்வுள்ளுடம்புகளி னுதவியாலும் நாமறிந்துகொள்ள வேண்டியவனுபவங்களும் பலவுளவென்பதுமே யென்க. ஆதலின் இந்த ஸ்தூல வுடம்பைப்போலவே அவ்வுயர்சரீரங்களான காமிக மானஸிகவுடம்புகளையும் அப்பாலுமுயர்ந்த ஞானமயகோசங்களையுநாம் பக்குவப்படுத்திக் கொள்ளலும்வேண்டும். இவ்விதஞ்செய்துகொளும் வழியின் நுண்ணிய விவரங்களையெல்லாம் இப்பிரமஞான வாராய்ச்சி யதிக தெளிவுடன் விரித்துரைக்கின்றது. இஃது ஓர்புறமிற்க, முதலிலிவ்வகை யுயர்நோக்கத்தின்கண் மனதைச் செலுத்தி, அவ்வழியிற்றானு நிற்றலேவேண்டுமெனு முறுதியை யொருவன் கைக்கொள்ளுவானாயின் அவனது கவலையாதி யொழிந்ததெனக் கொள்ளலாகும். இத்தன்மையதான விச்சைவாய்ந்தோ னொருவனுக்கித்தருணத்தில் தன்னறிவினிற் றோன்றும் உண்மைகள் மூன்று அடியில் வருமாறு:—

முதலாவது இவ்வழியில் நுழைந்துசெல்லத் துணிவுகொண்டபின் இவனடைய வேண்டிய முடிவிற்கு அளவே யிடையாது. பெறற்கரிய பரிபூரண பக்குவத்தை இவனடைதல் வேண்டுமென்பதே பிரபஞ்ச நிர்மாணத்தைப் புரிந்த கடவுளின் கருத்தாகும்.

இரண்டாவது இவ்வெல்லையில்லாப் பேற்றைச் சாதித்துக் கொள்ளற்கு வேண்டிய சகல சக்தி சாமர்த்தியங்களும் இவனிடமே தங்கிநிற்கின்றன.

மூன்றாவது இப்பூரணமாய பரிபாகத்தை முடித்துக் கொள்ளற்கு இவனுக்குக் கிட்டியிருக்குங் காலத்திற்கும் ஓர் அளவென்பது இடையாது. ஆனாலிப்பெரும் பாக்கியத்தை யெவ்வளவு சீக்கிரத்தில் ஒருவன் அடைவானோ அவ்வளவுக்கு அவன் விசேடவானந்தம்பெறுவனு மிவ்வுலகிற்கே யுபகாரியுமாகிறான்.

இம்மூவிஷயங்களையுந் தன்னறிவிற் சந்தேகமறத் தெளிந்துகொண்ட வொருவனுக்கு ஒரு ஜன்மகால வளவென்பது

இப்பிரபஞ்சமாகும் பாடசாலையில் கற்றுணரும் பொருட்டுப் பிரவேசித்து ஆங்குதான் கழிக்குமொருதினம் போன்றதே யாகுமெனவும், இஜ்ஜன்மகாலத்தில் தனக்கேற்பட்டிருக்கும் ஸ்தூல சரீரமும், அப்பாடசாலையிற் பாடங்களை கற்குநிமித்தம் இச்சமயத்தில்தான்கைக்கொண்டிருக்குங் கருவியேயெனவும், செவ்வனே புலப்படுமன்றோ! ஆகவே இப்பாடசாலையில் தான் றமைந்திருப்பதற்கு காரணமான, இப்பாடங்களை கற்றலொன்றே, தனக்குப் பரம முக்கியமான கடமையாகுமாதலின் அதைவிட்டு எக்காலத்திலும் ஏனைய வியவஹாரத்திற்றன் சிந்தையைச் செல்லவிடுதல் செப்பொணு மூடத்தன்மையாகு மென்பதையு மிவனுணர்ந்து கொள்ளுவன். இதனுல் இவ்வுயா கருத்தைப் பாராட்டாது சாமானியரா மாந்தர் இப்பொய்யுலகினது விஷயங்களான செல்வங்கீர்த்தி முதலியவற்றை மட்டும் நாடியலைதல் அறிவிலாச் சிறுகுழந்தையின் பயனற்ற விளையாட்டாகுமேயன்றி வேறன்று. இஃது அரைக்ஷணத்திலழியும் அற்பசுகத்தைநாடி பெறற்கரிய பெரும்பாக்கியத்தை யறிவிலாதிழந்து விடலேயாகும். *

ஆகவே யிவ்வுயர்விஷயங்களை யாராய்வோன் தன் சிந்தையை யிவ்வுலக விஷயங்களிற் செல்லவிடாமல் உலகங் கடந்த மேம்பட்ட நோக்கங்களுள் நிலைநிறுத்துகிறுன். ஏனெனில் இவ்வுயர் விஷயமிவனுக் குசிதமாங் கடமையாகுமெனவும், இம்மாயாவுலகின் வஸ்துக்களெல்லா முண்மையில் நிஷ்பலங்களானவைகளே யெனவு முணர்ச்சி யேற்பட்டிருக்கின்

---

* களவுவஞ்சனைகாமமென் றிவையெலாங்காட்டும்
அளவுமாயையிங்காரெனக் கமைத்தனரையா
உளவிலேயெனக்குள்ளவா றுணாத்தினுன்னடிமை
வளருமாமதிபோன்மதி தளர்வின்றிவாழ்வேன்.

பாடியாடிநின்றிரங்கி நின்பதமலாமுடிமேல்
சூடிவாழ்ந்தனரமலநின் னடியர்யான்றெழும்பன்
நாடியேயிந்தவுலகத்தை மெய்யெனநம்பித்
தேடினேன்வெறுந்தீமையே யென்னினிச்செய்வேன்.

உற்றுணர்ந்தெலாசீயல தில்லையென்றுனையே
பற்றிநின்றனரெந்தைநின் னடியர்யான்பாவி
முற்றுமாயமாஞ்சகத்தையே மெய்யெனமுதல்தான்
அற்றிருந்திடத்தொழில் செய்வான்றனைநிகாரனேன்.

னம் பேச்சுக்களியாவு நம்மவரது நெஞ்சங்களிற் குடிகொண்டு நிற்கும் பரமநாஸ்திகத் தன்மையையன்றோ விளக்குகின்றது. ஏனெனில் நமது பேச்சுமுழுமையையும் நமது ஆன்மா, நமது புத்தி, 'நமது மனம்' என நிகழுகின்றமையின், புத்தி மனமான் மாவாகும் இவ்வஸ்துக்களியாவும், நாமெனப் பிரத்தியக்ஷமாய் விளங்குமிந்த ஸ்தூலசரீரத்திற்குச் சொந்தமானவையென நாங்கொண்டு நிற்பதையே விளக்கிக காட்டுகின்றனவன்றோ! இவ்விதமாய் "இவ்வன்னமய கோசமே நாம்" எனும் பாழான மயக்கத்தை நாமுற்றிலும் விட்டொழித்தாலன்றி இப்பெரும் விசாரணையில் சிரத்தை நமகதுண்டாகி, யுண்மையை யுள்ளபடி நாமுணரப்போவதில்லை. சிறி தாழ்ந்த கருத்துடன் சோதிப் போமாயின், நமது ஸ்தூலசரீரமாவது, இந்த ஸ்தூல உலகின் பிரகிருதியால் வனைக்கப்பட்டு இங்கு நாம் வியவஹரித்தற்காக வேற்பட்டிருக்குமோர் கருவியே யென்பதும், இச்சரீரத்தை யுந்தாண்டி யப்பால் நாம் தனியே வசிப்பதுஞ் சத்தியமே யென்பதும்,புலப்படும். இச்சரீரம் வாழும்பொழுதும் இதன் ஆதா வின்றியும், இஃதிறந்தபின்னர் இதன் சம்பந்தஞ் சற்றுமின்றி யும், நாந்தனியே மேலுலகங்களில் விலாசஞ் செய்தலும் கூடு மென்பதையும் நாமறிந்து கொள்வோம்.

ஆதலின் நமக்கு உண்மைப் பொருளாம் ஆன்ம வாழ்வே முக்கியமும் பிரதானமு மாயவாழ்வாகுமேயன்றி, ஜடமயமான இந்த நமது ஸ்தூலத்தின் விவஹாரங்கள் யாவும் சாரமற்றவை களேயாகும். ஆகவே ஆன்மபரி பாகத்திற் கிசைஞ்சல் விழையு மாயின் அதற்குக் காரணங்களான ஸ்தூல சரீரத்தின் விவகா ரங்கள் தாமதமின்றி திக்காரஞ் செய்யப்படல்வேண்டும். *

---

* வந்தவரவை மறந்துலகாய் வாழ்ந்து கன்மபந்த
முறவுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யா
ரிந்தமதி யேனுனக்கிங் கென்மதிகேளென்றாலே,
சந்தத நெஞ்சே பரத்திற் சாரினின்ப முண்டாமே

உடலைப்பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே காடுவரோ மெய்யைப்—படபடென,
வேண்டுவேனிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனு
ஞண்டு நீதானே யறி. தாயுமானவர்.

ஸ்தூலசரீரமும் அதன் காரியங்களும் நமது ஆன்மபரிபாகம் நிறைவேறும்பொருட்டு நமக்களிக்கப் பட்டிருப்பனவே யென்பது யிவ்வகை யுராய்ச்சியுள்ளார்க்குத் தெள்ளிதின் புலப்படுமாதலின், நமது ஆன்மாபி விருத்தி யொன்றே யிவற்றுளெல்லாம் நம்மாற் கணிக்கத்தகும் விஷயமாகின்றது. இக்கருத்து மட்டும் நமது நெஞ்சில் வேரூன்றுமாயின் இவ்வுலக வாழ்வில் நமதுநாட்டம் மிகுந்த மாறுபாட்டை யடையுமென்பதற்கைய முண்டோ? உலகினர் சாமானியமாய் தத்தமக்குத்தேவையெனவாசைகொளும்விஷயங்களியாவும் நமக்கத்தனையவசியமெனத் தோன்றா தொழியுமன்றோ! உலகினருக்கு மகிழ்ச்சியைத் தருவனவாம் "பொருளீட்டல்" உயரதிகார பதவிகளைநாடல், இவைபோல்வன இனி நமக்கத்துணை யானந்தகர மானவைகளாகுமோ? யாவற்றினு மேலான வான்மவாழ்வாவது யாதென்பதை யிவ்விதம் நன்குணர்ந்தோனொருவன், உலகம்படைத்தழிக்கும் கடவுளின் கருத்தான ஜகத்பரிபாக மார்க்கத்தின் காரியத்தை நிறைவேற்றுதற்கே தானிவ்வுலகத்தில் பிறப்படைந்திருப்பதை யறிந்து, அவ்வழி நிற்றலே தனக்கு முக்கியமான கடமையென்றும், அஃதல்லாத தெதுவும நிஷ்பிரயோஜனமாகு மாதலின் அறவே நீக்கப்படல் வேண்டுமென்றும், உறுதி யுடைத் தீர்மான மொன்றைத் தன்னுள்ளே செய்து கொள்வனன்றோ!

உண்மையில் ஜீவன் இவவுலகில் வசிப்பதெல்லாம் தன்னுள்ளடங்கி நிற்குஞ் சகல சத்திகளையுஞ் சிறிதுசிறிதாய் வெளிப்படுத்திக் கொள்ளற்கும் தனதுத்தம வியற்கையாகும் திவ்ய குணங்களைப் பிரகாசிப்பித்தற்குமேயன்றி வேறன்று. இப்பெருங்காரியத்தைச் சாதித்துக்கொள்ளற்கே ஜீவாத்மாவும் இந்த ஸ்தூலவுலகில் ஜன்மத்தையடைகிறான். மேலுலகங்களி லின்னுமிவன் அறிவுடன் வியவஹரித்தற் கியலாமையின், இவ்வுலகத்திற் சிறிது சிறிதாய்ச் சுகதுக்கமாதியனுபவங்களை யடைந்தபின்னர், அவற்றின் பலனாய் ஏற்படுமறிவின் முதிர்ச்சியால் காலக்கிரமத்தில் சாசுவதமாய் நிலைபெற்று விளங்குந் தன்மைபொருந்திய வுயர்குணங்களைத் தன்னுண்ணோட்டிக்கொள்கிறான்.

இனியப்பாலு மிவவரும்பெரும் விஷயத்தை நுண்ணிய் வறிவுடன் நோக்குவோனுக்குப் புலப்படுமுண்மை யாவதியா

றது.. இவ்வித வியற்கைவாய்ந்த வொருவனுக்கெப்பொழுது மெய்வியவஹாரத்திலும் பரமார்த்தமாகிய வுயர்நோக்கமே தோன்றி, இப்பூவுலகின் திருஷ்டிகளியாவும் பெருமயக்கத்தாலெழுபுவைகளே தவிர வேறன்றெனவும், இவ்வகை யெண்ணங்களுமிச்சைகளுமேற்படின், அவை நம்மனங்களைச்சூழ்ந்து இருண்டமேகம்போல வளைந்துகொண்டு, அவற்றின் திருஷ்டிகளை மறைத்து, அவ்வுயர்நிலையில் நாமெதையு முள்ளபடி பார்த்தறிய முடியாவண்ணம் செய்து விடுகின்றனவெனவு முண்மைவெளிப்படுகின்றது. ஆதலின் தன்மனதில் தனதுத்தம சுபாவத்திற்கும் அதமவியற்கைக்கும் இவ்விதமாய்க்கலகம்நேர்ந்துழி, அவ்வுத்தமவியற்கையென்பதுவே தானென்றும், அதனோடுமுரண்படு மதமவியற்கையாவது தனதுகோசங்களிலொன்றில் தனது வசத்திற்குட்படாத ஏதோ வோரல்ப பாகமேயென்று செவ்வையாய்த் தெளிந்துகொள்ளுகிறான்.

இவ்வுத்தமாதம வியற்கைகளின் போராட்டத்தையே மேற்றிசையில் செயின்டுபால் என்பார் "இந்திரியங்களின் சாபவமானது மனத்தொடு கலகஞ்செய்தல்" என விளக்கிக் கூறியிருக்கின்றனர். இவற்றுள் சுத்தமனதெனு முத்தம வியற்கையேதானெனவும், அதம சுபாவந்தான் அநாத்மாவாய மாயை, அதாவது தனது கோசங்களு ளின்னுந் தனது வசத்தில் வாராததோர் விபாகமேயெனவும், உண்மை தெரிந்தோன் அறிந்துகொண்டு, தன்னை மாயையினுள் ளழுத்திக்கொள்ளாது தனதுன்னத வியற்கையோடு கலந்து நின்று தானே யதுவெனுந் துணிவை யனுபவத்தாலுந் தன்னடத்தையாலுங் காட்டி வருபவனாகிறான்.

இவ்வகிலபிரபஞ்சத்தையும் பரிபாகப்படுத்திவரும் மகாசக்தியானது இங்குள்ள சகல வஸ்துக்களையு முன்னேக்கிச் செல்லுமா றிடைவிடாது பிரேரணைஞ்செய்துகொண்டு வருகின்றதென்ப துண்மையாதலின், நாமனைவரு மெப்பொழுதாயினு மொருநாள் மேனிலைகளை நோக்கிச்செல்லல் இன்றியமையாததுவே யாகும். ஆயினும் நாம் எம்மட்டில் கடவுளின் அம்

சங்கல்பமாகு மிச்சதநலையை செவ்வனே யறிந்துணருகின்றோ மோ அம்மட்டில் நமது பரிபாக முதிர்ச்சி சுலபமாயும் விரைவுடனு நடந்தேறுமென்ப துண்மை. நாமெவ்வளவு சிரத்தையு முயற்சியுங் கொள்ளினும், எத்தனையோ தவறுதல்கட்குள்ளாகி நமது யாத்திரையின் மத்தியில் பலவிடங்களிற் பல தடவைகளிற் றடைப்பட்டு விழுந்துவிடவேண்டு மென்பதிற் சந்தேகமில்லையாயினும், இக்காரணத்தால் நாம் கவலைகொண்டு மனக்கலக்கமடைதல் நியாயமில்லை. நாமெத்தனை தடவைகளில் தவுறுதலடைந்தாலும், அப்பாலும் நமது பரிபாக யாத்திரையின் மார்க்கத்தை கடந்துசென்றே தீரவேண்டிய தவசியமாதலின், ஆரம்பத்தில் எப்படியோ அப்படியே இவ்வித தவருதல்களை யனுபவித்த பின்னரும் நாம் முடிவாகிய பேற்றை நோக்கி செல்லத் துணிதலே யுசிதமாகுமன்றோ! ஆதலின் விரைந்தெழுந்து சிறிதுதூரஞ் சென்றபின் மத்தியில் நேருந்தடைகளைக் கண்ணுற்றேங்கி மனந்தளருதல் மிகுந்த புத்தியீனமும் பிசகுமாகும். எவ்விதமாயினும் நமது தொழிலை நாமே முடிக்கவேண்டியதென்பதும், முடிவாகிய பேரின்பத்தை நாமடையாதிருக்கவே முடியாதென்பதும், நம்முள்ளொவ்வொருவரும் மத்தியில், அவரவர் பரிபாகந்தடைப்பட்டு நிற்குமிடத்திலிருந்து தான் மறுபடியு மாரம்பித்து மேற்சொல்லவேண்டுமென்பது மறுக்கொணுவுண்மையன்றோ! ஆதலின் நமது நிலைமைகளை நாமே மாற்றிக்கொள்ள முயலாது அவை தாமே மாறினபின் நாம் யத்தனிக்கலாமென நினைந்துறங்கல் அடாது. ஆகவே நாமெத்தனை தடவைகளில் தவருதல்களடையினும் உடனே பழையபடி முயற்சிக்க வாரம்பித்தலே மேன்மையாகும்! ஏனெனில் நமது பரிபாகத்தை நாமே நிறைவேற்றித்தீரல்வேண்டுமன்றோ!

இவ்விதம் நாமவசியமுடித்தே தீரவேண்டிய மகாகாரியமான இப்பரிபாகத்தை நாம் எவ்வளவு சீக்கிரத்தில் முயன்று விருத்திசெய்யத் துணிவோமோ, அவ்வளவுக்கு அஃது நமக்கு மேன்மையைத் தருமென்பதிற் சந்தேகமில்லை, ஏனெனில் இனிவரு நாட்களில் முயலுவதைக்காட்டினு மிச்

சமயத்தில் அஃது நமக்கு மிகச்சுலபமாய் நிறைவேறக்கூடி யதாகும். அன்றியும் இப்பொழுதே நாமுழைத்துச் சிறிதா யினு மபிவிருத்தியை யடைவோமாயின், அதன் பலனைப் நாம் சற்றுயர்பதவியை யடைவதனால், இவ்வழியினும் கீழ்ப் படியில் நிற்போராகிய நம்மினுந் தாழ்ந்தோர் பலர்க்கும் நாம் சிறிதுபகாரமாய் வழிகாட்டிவருதற் குதவலாமன்றோ! இவ்விதமாயுலகின் பரிபாகத்தை நடத்திவரும் பெருங்கூட் டத்தாருட்சேர்ந்து நாமுமொரு அற்பவளவிலாவது இப்பே தையுலகிற் குபகாரம்புரிதல் கூடும். அங்கு நம்முள்ளொவ் வொருவருக்கும் அற்பமாயாவது பணிசெய்ய அவகாசமும் திறமையும் வாய்க்குமென்பதி லையமில்லை. ஒருஜீவன் எவ்வளவு தாழ்ந்த பரிபாக ஸ்திதியிலிருப்பினும், அவனினுந் தாழ்ந்தோ னும் அவனாலுதவிசெய்து வழிகாட்டப்படு நிலையில் நிற்பவனும் ஆய மற்றோர் ஜீவன் இவ்வுலகினிற் கிடைப்பதரிதன்றே! பிரம ஞான வாராய்ச்சியி லிவ்விஷயத்தைப் பற்றிக் கூறியிருப்பதா வது: இவ்வுலகி லொருவனடைந்திருக்கும் பரிபாகவபிவிருத்தி யினது யவனுக்கு வெகுகாலங்களாயவன் செய்துவந்திருக்கு முயற்சியிற் கிடைத்திருப்பதுவேயாதலின், அஃது காலக்கி ரமத்திற் சிறிது சிறிதாய் நடந்தேறியதுவேயாகும்; ஆகவே திடீரென வதன் முதிர்ச்சி யொருகாலத்தில் நிறைவேறுவ தல்ல என்பதே. ஆனால் காரணகாரிய ரூபமான ஜகத்தின் நியதியானது என்றுந்தவறாத வுண்மையே யாதலால், அவ ரவர் செய்துவரு முயற்சியாங்காரணம் ஒரு கடுகளவாயினும் வீணாகாது அவரவர்க்குத்தக்க பலனாங்காரியத்தை வருவிக் குமென்பதி லையமேயில்லையென்று மஃது விளக்கிக்காட்டுகின் றது. இதை யறிந்தவனாகிய யிவ்வாராய்ச்சியுள்ளோன் இப் பொழுதே தானடைந்திருக்கு மபிவிருத்தியின் வலிகொண்டு பிறர்க்குதவிபுரியும் வினையை விரைந்துவருவனாயின், அஃதவ் வளவும் வீண்போகாது சிறிது சிறிதா யினிவரு நாட்களிற் றனக்கு மென்மேற் பக்குவ முதிர்ச்சியைக் கொணர்விக்கு மென்பதை யுள்ளங்கை நெல்லிக்கனிபோல் விசதமாக்கிக் கொள்வன். பின்னர் இவ்வுலகில் ஒருவன் சம்பாதித்துக் கொள்ளு மறிவை யுபயோகித்து தனக்குவேண்டுஞ் சௌக

ரிய்மாதிகளை தேடிக்கொள்ளறகு முயலுவதும்போலு மவன இவ்வுயர் தத்துவஞானத்தி னுதவியாற் றனது மனமிச்சை களின் பரிபாகத்தை யதிகப்படுத்திக்கொள்ள வறிவுடன் முயலுவோனுகிருன்.

இனி யிவ்வுத்தம வாராய்ச்சியை யாழ்ந்தறிதலா லேற் படு நற்பலன்களில மிகவுயர்ந்ததுங தற்காலத்தி லுடனே யாவருக்கும் பிரயோசனப்படுவதுமானதி யாதெனில்: மர ணத்தைப்பற்றிய நமது நினைவுகளியாவு முற்றிலு மாறிவிடு தலே யென்க. இவ்வுலகில் தம்மறியாமையால் மரணத்தை நோக்கி மனிதசமூகம் படுந்துன்பங் கவலையின் பிரவாகத் திற்கோரளவுமுண்டோ? இவ்விஷயத்தில் பொய்யு மூடத்த னமுமே நிறைந்தவைகளான கருத்துக்கள் மானிடருள் ளெங் குநோக்கினும் ஏராளமாய் பிரகாசித்து வருகின்றமையின், அவற்றை நீக்கி யுண்மையை யுலகினாறியுமாறு செய்தல் மானிடர்க்கெல்லா மிகுந்த க்ஷேமத்தை வருவிக்கு நற்காரி யங்களு ளொன்றாகும். இவ்வுயர் நன்மையை நமது பிரம ஞான மளிக்கின்றது. இதனை முன்ஜன்மங்களிற் தத்துவ வா ராய்ச்சிகளைச் செய்துவந்திருக்கும் "விட்டகுறை"யுடை மாந் தர் மயங்காதேற்றுக்கொள்ளுவர். இதனைச் செவிசாய்த்துண ருவோர் யதனை நினைந்து வியசனமும் பயமும் அடையாராய் அதன் யதார்த்தமான வுண்மைதா னின்னதெனவுணர்ந்து கொண்டு, நமது பரிபாக காரியத்தில் அதன் அதிகாரம் எம்மட்டிற் செல்லுமென்பதையுந் தெளிந்துகொள்ளுகின்றனர்.

இவ்விறத்தலல்லது மரணமென்ப தின்னதென ஒருவன் விசாரித்த தனுளவை யறிந்துகொள்ளுவனேல், அதற்காகப் பெரும்பீதியை யடைதலும் அல்லது அதை நோக்கி விய சனப்படுதலும் செய்யவேமாட்டான். அஃது தனக்கு நேரி னுமல்லது தானன்புவைத்த மற்றவர்க்கேற்படினு மிவனுக் கதனாற் கவலையுண்டாதல் உசிதமன்று. ஏனெனில் "இம் மரண மிதற்குமுன் எத்தனையோ தடவைகளிவர்கட்கு நேர்ந் திருப்பதால் தற்காலத்தி லதைக்கண்டு இவர்கள் பயமடை

தற்கு நியாயமில்லை. மரணமேற்பட்ட பின்னரும நமது ஆன்மா முன்போலவே சாசுவதமான வஸ்துவாய் விளங்குகின்றதன்றோ! மரணத்தால் ஸ்தூலவுடம்பு நாசமடைவது, நாந்தரித்திருக்கும் உடையொன்றை யெடுத்தகற்றியதுபோலாகுமேயனறி, நமது ஸ்வரூபமாகிய வான்ம வியற்கை கடுகளவேனுமிதனால் மாறுதலடையுமோ? இந்த ஸ்தூலவுலகத்தின் வாசனைகளால் நிறைந்த நமக்கு மரணத்திற்குப்பின் இவ்வாசனை நீங்கிச் சற்றுயர்ந்த நிலைக்குச்செல்லும் கௌரவங் கிடைத்ததேயன்றி வேறன்று. ஆகவே யுண்மைதெரிந்தவனுக் கிம்மரணம சந்தோஷத்தை யுண்டுபண்ணுமேதவிர துக்கத்தை வருவிக்காது. தனக்கு வேண்டியவர்கட்கு இஃது நேரும்பொழுதும், இதனாலவர்க்கு கிட்டுஞ் சௌகரியங்களையெல்லா முணர்ந்து, தற்காலத்தி லவர்களைவிட்டுத் தான் பிரிந்துநிற்க நேருவதால் சற்றே துன்பமுறினும், அவர்கட்கு அஃது க்ஷேமத்தையே தருகின்றதென்பதை யறிகிறான்.

இன்னும இம்மரணத்தின் நிலைமைகளைச சற்றாழ்ந்து விசாரிக்கத் துணிவோமாயின், மரணமடைநதவர்களைவிட்டுச் சற்றுயினு நாம் பிரிநதிருக்க நேருகின்றதென்பது வெளித்தோற்றமே தவிர, உண்மையன்றென்பதையும், இறந்தவர்களென்போர், இங்கு நமக்குச் சமீபத்திலேயே விளங்கும் ஸூக்ஷ்மவுலகில் தங்குவோர்களேயாதலின், நாம் தூங்கும்பொழுது நமது ஸ்தூலவுடம்பை யகற்றிநிற்குந் தருணத்தில் நாமவர்களருகிலேயே தங்கி யுறவாடுதலுங் கூடுமென்பதையுமுண்மையாக் கண்டு தெளிந்துகொள்ளுவோம். பிரத்தியக்ஷ வப்பிரத்தியக்ஷ வுலகங்களியாவும் கடவுளின் ஆளுகைக்குட்பட்ட வொரே பிரபஞ்சமேயாதலின், இந்த ஸ்தூலத்தை விட்டு ஏனைய வுலகிற்குச் சென்றால் அங்கு எதுசம்பவிக்குமோவெனும் பயமாவது, இவ்வுலகந்தாண்டிச் சென்றால் அப்பாலுள்ளவற்றில் நீதி முதலிய வொழுங்குகளிருக்குமோவெனுஞ் சந்தேகமாவது நமக்குத் தோன்றுதல் கூடாது. அன்றியும் ஸ்தூல திருஷ்டிக்கு அப்பிரதகியக்ஷமான மேலுலகங்களை படத்தில் வரைந்து காட்டுவதுபோல் அத்தனை

தெளிவாய்ப் பரிசோதனைசெய்து, பிரதேசங்கள் பிரதேசங்களாய் செவ்வனே நமது பிரமஞான சபையின் சோதகர்கள் விளக்கிக் கூறியிருக்கிறார்களாதலின், மேலுலகங்களில் பிரவேசிக்கு மவசியம் வாய்க்குமாயின், அக்காலை சிறிதுஞ்சந்தேகமின்றிக் கூசாது அவற்றையணுகிச்செல்ல துணிவனென்பதி லையமில்லை. ஏனெனி லிவனுக்கு இந்த ஸ்தூலவுலகின் விபாகங்களும் பிரதேசங்களும் எவ்வளவு நன்றாய்த் தெரிந்துள்ளனவோ அம்மாதிரி யவ்வளவு நன்றாய் சூட்சுமவுலகைப் பற்றிய விபரங்களுஞ் சுலபமாய் நம் பிரமஞான நூல்கண் மூலமாய் விசதமா யிருக்குமன்றோ!

இனியிம்மரணத்திற்கு பிந்திய வாழ்வின் விவரங்களான பதவிகளல்லது படிகளனைவற்றையுந் தெளிவுற வறிந்துகொள்ள வேண்டுமாயின் அவற்றைப்பற்றி விஸ்தாரமாய்க் கூறும் பிரமஞானப் புத்தகங்களை நமது நண்பர்கள் வரவழைத்துப் படித்துணர்ந்து கொள்ளல்வேண்டும். ஆயினும் யானிங்கெடுத்துக் காட்டவேண்டிய விஷயமொன்றுமட்டுமுண்டு. அஃதி யாதெனில், மரணமடைந்தபின்னர் ஒருவனுக்கு வாய்க்கு நிலைமைகளெல்லாம் அவனுலேற்படுத்திக்கொள்ளப்பட்டவைகளேயன்றி வேறன்றென்பதே. ஆதலா லிஃதுணர்ந்து புத்தி கூர்மையும் பிறர்க் குதவிபுரியுங் குணமுநிறைந்த வொருவன் இவ்வுலகை யடைந்தபின்னரும், இவ்விதஸூட்சும ஸ்திதிகளினியற்கையை யறிந்துகொண்டு அவற்றிற்கிசையத் தானுமொழுகிவரத்துணிவுகொள்வானுகில் இந்நிலைகளிலும் நூதனமாய வனுபவங்களைச் சேகரித்துத் தனதறிவைப் பெருக்கிக்கொள்ளவும், பல பெருமுபகாரங்களைப் பிறருக்காச் செய்யும்படியான நல்வழியிற்றனது காலத்தைக்கழிக்கவும், தகுந்த சௌகரிய சந்தர்ப்பங்கணிறைந்த அரும்பெரும்பதவிகளை யிவனடைவனென்பதில் சந்தேகமில்லை. இப்பக்குவம்பெற்ற வொருவனுக்குஸ்தூலவுலகிற்கு மேற்பட்ட விந்நிலையில் அனுபவங்கள், சாமானியமர்ணிடாறிவின்றி நம்பிவருகின்றபடி அந்தகாரமயமாய்ச் சொப்பனம் போன்றவைகளாகாவென்றும், பின்னைப் பலருக்குங் கோசரமான இந்த ஸ்தூலத்தின் வாழ்வைக்காட்டினும் பன்மடங்கதிகமாயும், இதன் ஆனந்தத்தையும் பயனற்றதாக்கி விடும்படி அவ்வளவு சக்தியுங்களும் ருசிகரங்களுமானவை

ளையும், இச்சூட்சுமவுலக நிலையினனுபவங்கள் விளங்குகின்
றனவென்பதுதென்படும். ஆகவே அறிவின் றெளிவுமுள்ளத்
துறவியும்பெற்ற இவனிருதயத்தில் நிறைந்திலங்கும் "அள
விலா அனாதிபரஞ் சோதியின் மஹிமை, இவனிடமிருந்து இவ
னைச் சூழ்ந்திருக்கும் பிறர் மாட்டுங் கிரணம் வீசிப் பிரகாசிக்
கின்றது. * அறிவிலாமாந்தர் இவ்வுலகில் தமதாயுட்
காலமென்று கூறுவதெல்லா முண்மையா மகண்ட வாழ்வில்
ஒரு தினமேயாகுமென்பது முன்னரே யுங்கட்கு எடுத்து
ரைக்கப்பட்டதன்றோ! ஆதலின் நம்மை இவ்வொவ்வொரு
தினமெனுஞ் சன்மத்தினு மடிக்கடி சேர்ப்பிக்கும் புனர்ஜன்ம
மாம் பெரிய விஷயத்தைப்பற்றி யிங்கு பேசப்புகுவோம்.

புனர்ஜன்மமெனும் இவ்விஷயத்தை யாழ்ந்துவிசாரியா
மல் நம்மனோர்களிற் பெரும்பாலார் அதிகமாய்த் தப்பபிப்
பிராயங்களையே கொண்டிருக்கின்றனர். இவற்றுள் ளொன்
றாவது, ஜீவன் மானிட பதவி யடைந்தபின்னர் மிருகசரீரங்
களிலும்பிறப்படைதலுங் கூடுமென்பதே. அரியதோர் மானி
டப் பிறவியைப் பெற்றபின்னரும், இம்மாதிரி பின் திரும்
பிப் பழையபடி கீழுள்ள மிருகத்தன்மையி லிழிந்துநிற்றல்
ஒருபோதுஞ் சாத்தியமாகாதென்பதே யுண்மை, கீழான
மிருகாதிகளினின்றுமே மானுட சரீரமானது பக்குவப்பட்
டுவந்திருப்ப.துண்மையாயினு மானிடத்தன்மை யடைந்த
பிறகு ஜீவன் எத்தகைய குற்றங்களைப் புரியினும், எவ்வளவு
சோம்பலுடன் தனக்குற்ற சௌகரியங்களை பயன்படுத்திக்
கொள்ளத் தவறினும், கீழுள்ள படிகளுக்கவன் செல்லுதல்
அமையாது. ஒவ்வொரு ஜன்மகாலமு மொருஜீவனுக்கிச் சம்
சார மகாயாத்திரையில் ஓர் தினமே யாதலின், ஒருதின முழு
வதும் பாடசாலையில் நடக்கும் பாடங்கற்றுணராது சோம்
பலோடு நிற்குமொரு சிறுவன் மறுதினங்களிலும் அப்பாடங்
களையே கற்றுணர்ந்துகொள்ளுமாறு அங்கேயே தங்கிக்
காலங்கழிக்கும்படி நேருவதுபோல், ஜீவனுமிப் பதவியைவிட்

---

* சித்தர் தெளிந்தோர் தெளிவிற் றெளிவான
சுத்தசுகக் கடலுட் டோயுநா ளெந்நாளோ?
உள்ளத்தி னுள்ளேதா னூறுஞ் சிவானந்த
வெள்ளத்துளைந்து விடாய்தீர்வ தெந்நாளோ? (தாயுமானவர்)

டிப்புறச் செல்ல வியலாது தாமதமடையினும், இவனுதயி விர்த்தி மேமேலே செல்லுதலாதிகளாற் குறைந்துவிடுமென்பதில்லை. பின்னை சிறிதுசிறிதாகவாவது மேலே சென்றுகொண்டேவரு கின்றதேயன்றி தடைப்பட்டு நிற்றலேயோ குறைவுபட்டுப் போய்விடுதலேயோ யடைகிறதேயில்லை.

இவ்விஷயத்தைத் தெளிந்துணராதார் பலர் இதைக் கேட்டவுடன் மிகவு மாக்ஷேபிக்கிறார்கள். இக்கொள்கையின் உள்விவரங்களி யாவற்றையும், அவற்றை யசையாவுண்மைக ளென ஸ்தாபிக்கத்தக்க மறுக்கொணு வாதங்களையும் யானிங் கெடுத்துக் கூறல் பொருந்தாது. இவற்றை யாய்ந்தறிய விரும்புவோர், 'என்னினு மதிகம்' திறமை வாய்ந்தவரான பெசன்டம்மையாரா லியற்றப்பட் டுலாவிவரும் பிரமஞானப் பனுவல் இரண்டாம் புத்தகத்தில், விஸ்தாரமாய் வரையப் பட்டிருப்பதைப் படித்துணருவார்களாக. ஆயினு மிங்கி யான் கூறவேண்டியவோர் விஷயமொன்றுண்டு. அஃதியா தெனில், புனர்ஜன்மமெனும விஷயத்தைப்பற்றிய இவ்விவர மும், இவ்வாராய்ச்சியின் ஏனைய விவகாரங்களைப்போலவே, வெறுமபிப்பிராயமட்டுமாய் நிற்பதல்ல, பின்னை பெரியோரி யர் பலருக்கு பிரத்தியக்ஷமாய் அனுபவத்திற்றெளிந்த கருத் தேயன்றி வேறல்லவென்பதே.

இவ்வித மானிடனுக்கு இவ்வுலக பரிபாகமார்க்கத்தில் தான் வந்தடைந்திருக்கும் ஸ்திதி யின்னதென மறிவேற் படின் அதனானுபர்ந்த லாபமே கிடைக்குமென்பதிலையயில்லை. எவ்விதமெனில் இவ்வுலகினுக் கப்பாலும் இதற்கு மேம்பட் டவைகளாயும், அநேக புவனங்க ளடுக்கடுக்காய் அவையவற் றிற்கேற்ற பரிபாக மார்க்கங்களி லொழுங்குடன் சென்று கொண்டிருக்கின்றனவென்பதை யொருகணமேனு மிவனுண ரின், இவனுக்குத் தானே சகல பிராணிகளினு மேலானவனெ னும் பெருமையுந் தன்னபிமானமுங் குன்றுவதுமன்றி, தனக் கென்று முடிவிலாத வபிவிர்த்தியாகிய மேல்வழிகள் கிடக் கின்றனவென்பதையும், பன்னாட்கு பின்னராயினும் தானடை யப்போகும் பதவிகள் சொல்லற்கரிய மஹிமையுடையன

லென்பதையு மிவனறிந்துகொள்ளுவதினு லிவனுக்கு அசையா மனவுறுதியு மஜேயாவுத்சாஹமு மேற்படுகின்றன.

இதுகாறுங் கூறிப்போந்த விஷயங்களான கடவுளினியற்கை, மானிடன், கடவுளுக்கு மவனுக்குமுள சம்பந்தம் என்பனவற்றுள், காரணகாரிய சம்பந்தம், அதாவது செய்கைகளுமவற்றின் பலனும், அல்லது அக்கிரமம் அநீதிகளை யொழுங்கிற்குக் கொணர்விக்கும் முறை,யென்பனவாதி நாமங்களாலழைக்கப்படும் ஜகத்தின் நியதிரூபமாகிய ஆக்ஞையைப்பொதுவாயொப்புக்கொண்டு வியவஹரித்தோம். இனியிந்நியதியின் யதார்த்த ஸ்வரூபமான மூன்றும் விஷயத்தைச் சற்று விரிப்பாம். இந்நியதியே மற்றியாவற்றிற்கு மூலமுமாதாரமாய் விளங்கு முண்மையாகின்றது. இதையுள்ளபடி நாமறிந்துகொள்ள வேண்டுமாயின், இது அவரவர்கள் செய்த பாபபுண்ணியங்கட்குக் கடவுளாலளிக்கப்படுந் தண்டனை யல்லது வெகுமானமெனப் பலமதங்களிற் கூறப்பட்டிருப்பனவற்றையெல்லா நாம் மறந்துவிடல்வேண்டும். ஏனெனில் இவையாவும் சமயத்திற்கேற்றவாறு அவ்வக்காலங்களில் அறியாமையால் பல மானிடர் தவறுதலா யேற்படுத்திக்கொண்ட கொள்கைகளேயாகும். இனி யிதனுண்மைதா னியாதோவெனில், காரணங்கள் அல்லது அவரவர்கள் செய்யும் பாப புண்ணிய ரூபங்களான செய்கைகள், கடவுளாலேற்படுத்தப்பட்ட வியற்கையில், தாமே தமக்கேற்ற பலன்களைத் தருவித்துக்கொள்ளுகின்றன என்பதே. ஏனெனில் இச்செய்கைகளல்லது காரணங்களியாவும் விரைகளாய் ஏற்பட்டுப் பின்னர் தத்தமக்கேற்ற பலன்களல்லது செடிகளாய் முடிந்துவிடுகின்றன. முடிவுகளிற்கு ஆரம்பங்களான சிறு விரைகளினின்றுமே கிளம்புவனவாகி, யவற்றைத் தம்முட்கொண்டே வளருகின்றனவன்றோ! ஆதலின் ஆரம்பங்களான காரணங்களால் ஏற்படுபவைகளேயன்றி, இக்காரணங்களைவிட் டன்னிய அம்சங்களவற்றினுள் நுழைவதும், அதனத னியற்கைக்கு நேர்விரோதமா யமைவதும் எங்ஙனமாகும். காரணத்தினின்றுங் காரியமாம் கருமபலன் விளைந்துவருவது நாமறியாதபடி பரமாஹஸியமாய் நேருகின்

றதாயினும், இவையொன்றினின்று மற்றொன்றுண்டாவதுவே தவிர ஒருவரை அவர் சம்பந்தம்பெறாத மற்றொருவர் நோக்கி விதித்துவிடுந் தண்டனைபோல்வதாகுமோ? இம்மஹா நியதியல்லது ஜகத்தின் ஒழுங்கின்படி. மானிடர் தம்மையும், தம்மைச்சூழவிருக்குஞ் சகல நிலைமைகளையும் தாமே யவரவர் செய்வித்துக் கொள்ளுகின்றன ரென்பதுதானுண்மை.

இக்கருத்து இச்சிறுநூலைப் படிப்போரிற் பலருக்கு நூதனமானதெனத் தென்படினும், இதையவர்கள் உற்றுணர்ந்துகொள்ளச் சற்றுப் பிரயாசைப்படுவார்களாயின் இஃதையறிந்துகொள்ள லத்தனை சிரமமானதாகாது. "நாமெது விதைத்தோமோ வதுவே விளையும்" எனும் பழமொழியையறியாதவர்களு மிருப்பரோ? இருக்கவேமாட்டார்கள். அக்கருத்தையே சற்று முன்னும் பின்னுமாய் அகலநோக்கி, "எப்பலனை நாம் இப்பொழுதனுபவிக்கிறோமோ அதையே பூர்வத்தில் நாம் விதைத்திருப்போம்" என விரித்துக்கொள்ளல் கடினமாகாது. நமக்கு த தற்காலத்தில் வாய்த்திருக்கும் சௌகரியங்களான நிலைமைகளோ, அல்லது நாமிடையேற்பட்டிருக்குஞ் சிலமல்லாத குணங்களோ, இவையாவும் நாமே முன்ஜன்மங்களில் செய்துகொண்ட காரணங்களின் பலன்களேயன்றி வேறாகாது. இவ்வுண்மையைக் கைக்கொள்ளாவிடின் உலகில் எப்புறத்திலுங் காணப்படு அக்கிரம வனீதங்களான குற்றங்குறைகள் எப்படி கடவுளி னாட்சிக்குள்ளிங்கு நேர்ந்தனவென்பதை நாமறியவு முடியாது. எங்கு நோக்கினும் ஒருவர்க்கிருந்தபடி மற்றவர்க்கு செல்வமுதலிய நிலைமைகள் வாய்க்கவில்லையென்பதைக் காணலாமன்றோ! மானிடரு மொருவரைப்போன்று மற்றவருமாகாது, கல்வியாதி பரிபாகத்தேர்ச்சிகளி லேற்றத்தாழ்ச்சியுடையவர்களாகவே காணப்படுகின்றனர். இவ்வுலகமாளுங் கடவுள் சர்வசக்தியும் நிஷ்பக்ஷபாதமு முடையவரென்பதை யொப்புக்கொள்ளுவோமாயின், மேலேகூறிய மானிடராதிகளின் தாரதம்மியத் தன்மையை நியாயமு மொழுங்கும் பெற்றதென நாம் சமாதானப்படுத்திக்கொள்ளுவ தெப்படியாகும். ஆதலின் இவ்வித

வித்தியாதி வித்தியாசங்களை நியாயமேயென வறிந்துகொள்ளும் வழிதானியாதோவெனில், ஜீவர்களியாவரும் பலவித பரிபாக ஸ்திதியிலிருப்பவர்களேயன்றி யொரேபடியிலுள்ளவர்க ளல்லவென்பதை மறந்துவிடாம னிற்பதேயாகுமென்க. இக்கருத்தொன்றுமட்டும் நமதுளத்திற் றங்குவதால் நமக்குக் கிடைக்குந் தெளிவுதானென்னே! அதனால் முன்னமேற்பட்ட சங்கடங்களும் தீராச்சிக்கல்களும் போனவிடந் தெரியாதகலுகின்றன.

ஆதலின் அவிவேகமும் மிருகத்தன்மையு நிறைந்த மானிடன் ஒருவன் இன்னு முயர்நிலையடையாத தாழ்ந்த பக்குவத்தில் நிற்கும் குழந்தைப பருவமுடையவனே யாவன். இத்தன்மைய னிப்பொழுதிருக்கும ஸ்திதியில் நாமுமொருகாலத்தில் பூர்வத்தி லிருந்திருப்போமன்றோ' அன்றியு நாமிக்காலத்தி லடைந்திருக்கும் தசையில அவர்களு மென்றைக்காயினு மொருநாள் வந்து சேருவார்களன்றோ! இவ்வுலகமாம் பாடசாலையில் கீணிலைகளிருப்பவர்களும் ஜன்மங்களெனத்தகும் நாட்கள் பல கழிந்தபின்னர் மேநிலைகளை வந்தடைவார்களென்பது திண்ணமன்றோ' இவ்வாறு எவ்விதம், கீழ்ப்பதவி யடைந்தோர் புற்றுநோக்கி பலகாலத்திற்குமுன நாமுமந்நிலையினில் நின்றோமென வறிகின்றோமோ, அவ்விதமே தற்காலத்தில் செகத்தின் பரிபாகத்தில் பரமவுன்னத நிலைகளைபடைந்து விளங்கும் ஞானிகளாவாரையும், கேள்வியாலுணர்ந்து, கருத்தாலுன்னி, யவர்களடைந்திருக்கு முதிர்ச்சியை நாமும் வருநாட்களில்ப் பெற்றுய்யலாமென நிச்சயித்துக்கொள்ளலுங் கூடும். உலகில் சகல மானிடவர்க்கத்தவரையுந் தாண்டி யாவருக்குமேலாய ஆன்மபரிபாக முதிர்ச்சியடைந்து சகலருக்கு மூத்தோராய் விளங்கும் பெரியோர் பூர்வகாலங்களிலும் வசித்துவந்தனர், தற்காலத்திலும் அவ்விதமே வசிக்கின்றனரன்றோ! இவர்கள் தான் புத்தர்கள், கிரிஸ்துநாதர்கள் முதலிய பல பெயர்களாலழைக்கப்பெறும் ஞானமூர்த்திகளாம் ஆசாரியர்களாவார். இவர்களடைந்திருக்கு முன்னதநிலையை நாங்கவனிக்குங்கால் அப்பதவிக்கு நாமுமென்றைக்காயினு மொருநாள்

வந்துசேரலாமென்பது நமக்குத் தோன்றுமன்றோ! ஆகவே யடிமுதற் றலைவரை யிடையறாது சென்றேறிவரும் இப்பரிபாக மார்க்கத்தில் ஒவ்வொரு படியினு மானிடர் தம்முழைப்பாலும், மடைந்திருக்கு மனுபவத்தின் முதிர்ச்சியாலும், ஏறிச்சென்று நிற்பதை நாந்தெளிந்துகொண்டால், நாமு நமது முயற்சியின் துணையால் அவ்வுயர்பதவிகளை எப்பொழுதாயினு மொருநாள் அடைந்து வாழலாமென்பதும் நமக்குத் தெளிவாய் விளங்கும். இந்நிலவுலகின்கண் இயற்கையின் பிரகாரங்கள் எவ்விதம் மாறாத்தன்மையுடன் பிரகாசிக்கின்றனவோ, அவ்விதமே, உயருலகங்களிலுமவை நிகழ்கின்றனவாதலின், அங்கும் நமது முயற்சியாம் வித்திற்குத்தக்கபலன் கிட்டுவதிற் றடையிராதெனு நம்பிக்கையைக் கைக்கொண்டு நாமுழைக்கத் துணிந்தால் நற்கதி வாய்க்குமென்பதிலையமில்லை.

இவ்விதமல்லாது, இப்பூவுலகில் நியதியானது இன்றொருவிதமு நாளையோர் விதமுமாய் நடிக்கும்படி, அதற்கு ஸ்திரமான வியற்கையில்லாமற் போகுமாயின், நாமதை நம்பியுபயோகப்படுத்திக்கொண்டு வாழ்ந்துவருதலே பலமையாது; ஏனெனில் ஒவ்வொரு நிமிஷத்திலுந் திடீரென வதன்குணம் மாறி நமது பிரயத்தினத்தை வீணாக்கிவிடும்; நமக்குப் பலன் கிட்டுவதுஞ் சந்தேகமயமாகவே நின்றொழியும். இதனால் எச்சமயத்திலும் எம்முயற்சியால் எப்பலன் விளையுமெனு நிச்சயமே யேற்படாது. இவ்வண்ணமின்றி, பரமஸ்திரதையு முறுதியுங்கொண்டதாய் இச்செகத்தின் நியதியானதுஎன்று மாறாவியற்கைபடைத்து விளங்குவதால், அதை யாசிரயித்து நாமுழைத்துவாழுங் கூடுகின்றது. உதாகரணமாய் பூமியின் கவர்ச்சி, அல்லது வாயுவின் விரியுந்தன்மை எனு மிவ்வித இயற்கையின் சக்திகளை சதமாய் நம்பி நாம் அதததற்குகந்த பலகாரியங்களையாரம்பித்தலும், அவற்றின் முடிவுகளையும் பரம நிச்சயத்துடன் எதிர்பார்த்தலு நமக்குச் சாத்தியமாகின்றது. இந்நம்பிக்கையைக்கொண்டே நமக் கிச்சன்மத்தி லேற்பட்டிருக்கும் சுபாவகுணங்களியாவும் இதற்கு முன்சன்மங்களில் நாமே

யுத்பத்தி செய்துகொண்ட வெண்ண மிச்சைகளின் வினேவே யெனச் சந்தேகமற நிச்சயித்துக்கொள்ளல் கூடுமாதலின், இனியிச்சமயத்தினில் நாமேற்படுத்திக்கொள்ளுமாசை நினைவு களாலு மினிவரும் காலத்தில் நமக்கு வாய்க்கும் குணசீலங் களு முண்டாகின்றனவென வென்பது மாலோசித்தற் கிடமி ன்றிப் பெறப்படுமன்றோ! ஆகவே நமக்குவேண்டிய குணசீ லாதிகளை சிருட்டித்துக்கொள்ளும் சத்தி நம்மிடத்திலேயே தங்கிக் கிடக்கின்றதென்பது பசுமரத்தாணிபோல் காட்டப் பெறுகின்றதென்க.

ஆனு லிச்சத்தியானது நமக்குத் தேவையான நற்குண ங்களை யுடனே யதிசீக்கிரத்தில் நமக்கு வருவித்து விடுகின்ற தென்பதில்லை. ஏனெனில் பழைய துர்வழக்கங்கள் கழிதற்கும், அனுபவத்தாற் பக்குவத்தின் முதிர்ச்சி வேரூன்றி நிற்றற்கு, நீண்டகாலஞ் செல்லுமன்றோ! ஆயினும் முடிவாய் பலன் கிட் டுவதிற் சந்தேகமேயில்லை. எங்ஙனமெனில், நமது தற்காலத் திய நிலைமைகளெல்லாம் நாமிற்றைக்கு முன் விதைத்த விரைக ளின் பயனென்பதைத் தேறத்தெளிய வுணருவோமாயின், யினிவரும் காலத்திற்கேற்ற நிலைமைகளை வருவித்துக் கொள்ள ற்கு முசிதமான காரியங்களை யிந்நிமிஷத்தி லாரம்பிக்கத் துணி தலு நமக் கசாத்தியமாகாது. ஆகவே வருங்கால முழுமையும் நமது கைக்குள்ளேயே யகப்பட்டுக் கிடக்கின்றது. ஆனால் நமது பழவினைகளி லின்றுவரை பலனுக்கு வாராம லெஞ்சி நிற் பனவற்றால் இனி வருங்காலத்திய பலன்கள் பாதிக்கப்படலா மென்ப தொன்றுமட்டுமுண்டு. ஏனெனில் நமது இச்சைகளு நினைவுகளு மவையவற்றின் பலன்க ளனைவற்றையு முடனே யுண்டுபண்ணி விடுகின்றன வென்பதில்லை. சிற்சில வமயங்க ளில் அவற்றின் முடிவுகள் பூரணமாய் வெளிப்படுவதற்கு அநேக சன்மங்கள் செல்லுவது முண்டன்றோ! ஆயினுமிப்பல ன்களி லொரு கடுகளவேனு நிறைவேறாது தவறி நின்றுவிடுமெ ன்பீதுமட்டு மில்லை. அமெரிக்கா கண்டத்தில் சனனமடைந்து பிரசித்திபெற்ற "லாங்குபல்லோ" எனும் புலவர்பெருமானொ ருவர் கூறியிருப்ப தடியில்வருமாறு:

"கடவுளென்னும் அரியதோர் திரிகை தன்னுள்ளகப்படுமெ ல்லாதையும் மெள்ள மெள்ளவே யரைக்கின்றது. ஆயினும் மெவ்வளவு நுண்ணியதையும் விடாமலே யரைத்து விடுகின்றது. வெகுகாலஞ் செல்லினுஞ் சலியாது பொறுமையுடனேயே நின்று, யாவற்றையும் தள்ளிவிடாமலே தன்னுள்ளிழுத்துக்கொண்டு தவறுதலின்றி யரைத்துவிடுகின்றது"

இங்ஙன மாறு நிலைமைபொருந்தியும் பரமநீதி குன்றாமலு முலகங் காத்துவரும் நியதியின தன்மையைச் செவ்வனே யறிந்துகொண்டால், அதனின்று நமக்குப் பல விஷயங்கள் தெளிவாகி நமது விவேகமு மாழ்ந்து பலமடைகின்றது. அதனால் நமதுலகவாழ்வின் சுகதுக்கங்களு மிகவு மாறி யோர் நூதன வியற்கையொடும் விளங்குகின்றன. இவ்விதமின்றி யோர் சாமானிய மானிடனுக்கோ, அற்பமாய துன்பம்வந்தணுகியபொழுதும் அஃது தனக்குமட்டு நேர்ந்ததாதலின், அதை விசேடமாய்ப் போற்றியே மனம்நொந்து, தாங்கமுடியாததெனக் கருதிநிற்பன். இதனாலிவன் மெய்ம்மறந்து உலகமே பாழாகி முற்றிலுஞ் சந்தோஷமற் றந்தகாரத்தில் மூழ்கிவிட்டதெனவே மயங்குவது முண்டன்றோ! இவனுக்கு நேர்ந்திருக்கு மிடுக்கண்ணைச் சற்று நிதானிக்கில் அஃதுமிகவுஞ் சொற்பமானதெனவே யாவரு மதிக்கற்பாலதாயிருக்க, இவன்மட்டு மிச்சமயத்தில் விவேகமற்று அதை நோக்குவதால், தன்னைமட்டு மநியாயமாய்க் கடவுளுபத்திரவத்திற் குள்ளாக்கி யிருக்கின்றனரெனவே கருதி நோவடைவன். இவ்விதமான அறிவற்ற நோக்கஞ்சிறிதும் நமதுபிரமஞான விவேகியிடந் தங்குதலமையாது. ஏனெனில் இவனது ஆராய்ச்சியால் முன்பின் ஜன்மங்களின் தொடர்ச்சியாகும் சம்பந்தம் செவ்வனே விளங்கி, அவைகளது சம்பவங்களின் காரண காரியங்கள்யாவும் உள்ளங்கை நெல்லிக்கனியென விசதமாகின்றன. இதனாலிவன் தனக்கிச்சன்மத்தி லாபதுக்கள் நேருவதெல்லாம் இதற்கு முன்னரே யல்லது பூர்வசன்மங்களில் தானே செய்திருக்குந் தீயகாரியங்கள், மொழிந்திருக்கு மொழிகள், தனது நெஞ்சிற்றங்குட் புகுக் கிடங்கொடுத்த பல நினைவுக ளிவையனைவற்றின் பலனு

கவே நிகழுகின்றனவென்பதைத் தெளிந்துகொள்ளுவன். ஆத
லினிவனுக் குலகில் துன்பங்கள் சம்பவிப்பதில் சற்றேனு மனி
தமென்பதுண்டெனு நினைவு அறவே நீங்குகின்றது.

அன்றியும் துன்பங்களை யனுபவித்தலாவது ஒருவன்
முன்செய்த தீவினையாங் கடனைத் தற்காலத்தில் தீர்ப்பதுவே
யாகுமாதலின், இவ்வுண்மையை யறிந்து நமது விவேகியுமவை
தனக்கு நேரும்பொழுதெல்லா மவற்றைத் தனக்கனுகூலங்க
ளாக வேற்றுக்கொண் டுபயோகித்துக்கொள்ளுவன். ஏனெனி
லிவையாவுந் தனக்கு விசேட வனுபவத்தை யளிப்பதற்குதவு
தலாலவற்றால் தனக்கறிவு மிகுதலே ஏற்படுகின்றதென்பதை
யிவனறிந்து கொள்ளுகிறான். ஆதலின் இவ்வாபத்துக்கள் வரு
வதற்குக் காரணத்தை யுணர்ந்து இவை தனக்கு நேருவது
க்ஷேமமேயெனவும், அவற்றையனுபவித்தல் துன்பமேயாயினு
மதனால் தனது பூர்வவினைகளைத் தீர்த்து அவற்றைக் குறைத்
துக்கொள்ளுதற்குச் சௌகரியமான சந்தர்ப்பம் வாய்க்கின்
றதெனவும் கருதி, யவை கிட்டும்பொழுதெல்லாஞ் சந்தோ
ஷமேயடைவன். இன்னுமித் துன்பானுபவத்தி லிவனுக்கு
வேறோர் விசேடப் பிரயோசன முண்டென்பதையு மிவனறிகி
றான். அஃதியாதெனில் அதைத் துன்பமென நோக்குமுலௌ
கிகரின் திருஷ்டியை விட்டு மற்றோர்விதமாய்க் கருதுவானா
யின், அதனுட்கிடக்கும் உண்மையான சக்தியல்லது மகிமை
யின்னதென யிவனுக்குத் தெள்ளிதின்புலப்படும். விவேகமற்ற
மனிதனொருவனோ தனக்கினிமேல் வரத்தகு மாபத்தொன்றை
நினைந்து, முன்னரே பயமடைந்தவனாகியும், அஃது வந்தபின்
தனது முறுமுறுப்பாலத் துன்பத்தை யதிகரிக்கச்செய்தும்,
அஃது நீங்கியபின்னரும் பன்னாள்வரை யவ்விதந் தனக்கு
நேர்ந்ததை நோக்கிச் சினமும் விசாரமுமடைந்தும், நாட்கழிப்பு
வனன்றோ!

இதுகாறுமியான் விளக்கிவந்தபடி யாராய்ச்சியையுடை
யோனிவ்வண்ணம் இனிவரக்கூடுமென பாவிக்கத்தகும் வருத்
தங்களை நினைந்து அவை வருமுன்னரே வீணில் வருந்தனைப்புறு

வனே? மாட்டான்; ஏனெனில் நாம் நினைந்து பயங்கொண்டவை யுள் துக்கங்களில் முக்கால்வாசி சம்பவிக்கிறதே யில்லையென்ப துண்மை. அல்லாது ஒருவேளை யவற்றுட்சில நேரிடினுமவை நாம் பயந்து நடுங்கியிருந்தபடி யத்துணை பலமானவைகளா கிறதில்லை. ஆதலின் ஏதேனு மல்லல்விளைந்தால் அதை யொன் றுக்குப் பத்தாய் நினைந்து கலங்குவதால் அதிகரித்துக்கொள் ளாமல், நமதறிஞனுவாலும் தான் முயன்றும் விலக்கிக்கொள்ள முடியாத துன்பங்களைத் தனது பொறுமையுறுதியாதி குணங் களினுதவியால் சகித்துக் கொள்வன். தனக்கு வருவதைத் தடுப்பதெவராலு முடியாதெனும் பயத்தால் நடுங்கித் தைரிய மிழந்தவனாய் இவன் திரிபவனன்று; பின்னை யிவ்வகைத் துன் பங்களெல்லா, மவையவற்றைத் தாங்கியப்பாற்செல்லுவதற்கே ற்ற பக்குவத்தைத்தானே யுத்பத்திபண்ணிக்கொள்ளுந் துணி வை அறிவுடையொருவனுக்களிக்குந் துணைகளேயாகும் எனத் தெளிந்துகொள்வன். ஆகவே யிவ்வண்ண மிவன்தான் முன்செ ய்ததீவினையால்நேரும் பலன்களின் ஆதரவால், இனிவருங்கால த்தில் நன்மையை விளைவிக்கும் விரைகளை யேற்படுத்திக்கொள் ளுகிறான். எவ்விதமெனில் முன்செய்த வினையின் பலன்களான தீமைகளை யனுபவிக்குங்காலே, இவனுக்குண்டாகும் தைரி யம் பொறுமை மனவுறுதியாகு நற்குணங்கள் இப்பால் வருங் காலத்தில் பன்னாட்களினு மிவனுடன்கூடவே நின்றுதவியைப் புரிந்துவருமன்றோ!

இத்தன்மையதான பிரமஞானத்தின் விளக்கத்தை யடைந்தவன் இவ்வுலகிலேனைய சாமானியரா மாந்தர்போ லன்றி யெப்பொழுது மிடைவிடாச் சந்தோஷம், எத்துன் பம் வரினுமசையா மனவுறுதி, யாவருக்கு மெத்தருணத் திலுங் கருணையு முபகாரமுமளித்தல், இவைபோன்ற நற்கு ணங்களாற் சிறப்படைந்து விளங்குவன். இக்குணங்களா லிவ னுக்குச் சாந்தியு மமைதியும் வாய்ப்பினும், அவற்றால் சலன மும் பரபரப்புமற்றுத் தன் காலங்கழிப்பவனாகான். மற்று பரமசிரத்தையு மாதரவும் பெற்றவனாய், தனது ஒவ்வொரு நிமிஷமு மிகவு முக்கியமானதேயென வெண்ணி, யிவ்வுலகத்

திற்றனது ஜன்மகாலத்தில் அரைக்கணமேனும் வீணே கழித்தற் கொல்வாரென வுண்மையுணர்ந்தே பொழுதைப் போக்குவன். ஏனெனில் தனது மனமொழி மெய்களால் தனது வருங்காலத்திய சுகதுக்காதிகளைத் தானே வகுத்துக்கொள்வது மட்டுமன்று, பின்னை யிதர மானிடர்களின் க்ஷேமாக்ஷேமத்தையு மிவன் தனது பிரவிர்த்தியால் பாதித்துவருகிறான் என்பதையும், அதனால் தனக்கு மிகுந்ததோர் பொருப்பு ஏற்பட்டிருப்பதையு மறிந்துகொள்ளுகிறான். எங்ஙனமெனில் இவனது நினைவுகளெல்லாம் பொய்யானவைகளன்று, பின்னை பிறர்க்குயர்ந்த நன்மையையோ, யல்லது தீமையையோ, அந்நினைவுகளால் உண்டுபண்ணல் கூடுமென்பது மிவனுக்குத்தெரியும். இக்காரணத்தால் ஒருவனது நினைவுகளின் பலாபலன் அவற்றைச் சிருட்டித்தவனைமட்டுஞ் சம்பந்திக்குமென்பதன்றென்பது விசதமாகும். இவ்வாறு ஒருவனது காயிக, மானத வியற்கைகளின் வளர்ச்சிகளும் பிறரையணுகியவர தியற்கைகளையுந் தமக்கொவ்வினவையாக மாற்றிவிட முயலுகின்றன. ஆதலின் தான் சம்பந்திக்கும் அன்னியர்களது காயிகமானசிக சரீரங்களின் சௌக்கிய அசௌக்கியத்திற்கு இவன் காரணமாகிறானென்பதையும் நமதறிஞரும் தெளிந்துகொள்வனன்றோ!

இவ்வாறாய விவேகம் நமது நெஞ்சின்கண் வேரூன்றுமாயின், அதனால் நமது சீலமுந் தருமமுஞ் சாமானிய வுலகினருக்குள் நிலைபெற்றிருப்பதிலும் பன்மடங்குயர்ந்தது வாகுமன்றோ! ஏனெனில் இவ்வகை யறிவுடையோனுக்கு, தனது செயல்மொழிகளை மட்டுமன்று, பின்னை நினைவுகளையுந் தான் வசப்படுத்தி பரிசுத்தங்க ளாக்கிக்கொள்ளுங் கடமையு மேற்படுகின்றது. இதற்குக் காரணம் நினைவுக ளத்தனையு மானத வுலகத்தின் சிருட்டிகளாதலின், அவற்றின் பாலூறிய மூட்டங்களான விச்சை தொழில்களைக் காட்டினு மிகவுயர்ந்தனவும் முக்கியமானவைகளு மாகின்றமை என்க, உதகாரணமாய், எங்கு நோக்கினும் மானிடர் தஞ்சத்திபி னளவிற்கு மீறிய வுழைப்பு மலஸ்

தையு முடையராய்க் காணப்படு மிந்நாளில், அநேகருக்குள்ள துர்க்குணங்களி லொன்றுவது தக்க காரணமின்றிச் சடுதியிற் கோபங்கொள்ளுந் தன்மையாகும். அநேகமாய், இத்துற்குண மற்றவரைக் காண்டலு மரிதெனக் கூறலுமமையும். இஃது ஓர் பெருங்குற்றமே யென்பதை யறிந்தே யாவரு மிதை நீக்கி கொள்ளு முயற்சியைச் செய்துகொண்டே வருகின்றனரென்பதிற் றடையில்லை.

ஆயினும் இஃதுடையா னொருவன் இத்துர்க்குணத்திற் கிடங்கொடுக்கு மொவ்வொரு தருணத்திலும் யாது சம்பவிக்கின்ற தென்பதைக் கவனியுங்கள். இச்சமயத்தில்கோபகுணம் உள்ளடங்கி நிற்பதைவிட்டுத் திடீரென வெளியிற்கிளம்பி வெடிப்பதால், இத்தீயகுணத்திற் கநுகூலமான வளர்ச்சி தனது காமமய கோசத்தில் முன்னிலு மதிகமான வுறுதியடைந்து விடும்படி செய்துகொள்கிறான். இதனால் இன்னு மதிகம் சுலபமாய் இக்குணம் பிரகாசிக்கும்படி யாக்கிக்கொள்ளுகிறான். அன்றியு மிதனால், இவ்வெண்ணத்தை யெதிர்த்துப்போராடுவதற்கு இவனிடமுள்ள சக்தியு முன்னிலு மதிக குறைவை யடையும்படியே செய்துகொள்ளுகின்றனன்.

இதுவுமன்றி, இந்நினைவுகளின் சலனங்க ளொருவனிட முத்பத்தியானபின் அவனைவிட்டு வெளியேறி மற்றவர்களையுஞ் சம்பந்தித்து, அவர்களது இச்சாமனோ சரீரங்களிலும் தம்மியற்கையனவாய சலனங்களை யேற்படுத்தி விடுகின்றன. ஆதலின் மேலே கூறியபடி கோபமெனுங் குணத்தின் சலனங்கள் ஏற்பட்டால், அவை இக்குணத்தையடக்கிக்கொள்ள முயன்று வரு மிதர மனிதர்களையு மடைந்து, தஞ்சொரூபத்தை யவர்களிடந் தாபிக்க நேருவதால், அவர்களுக்கு இத்துர்க்குணத்தை நீக்கிக்கொள்வது முன்னிலு மதிக கடினமாகி விடுமன்றோ! ஆகவே யொருவன் ஆலோசனையற்றுச் செய்துகொள்ளு நினைவுகள் பிறரைத் துன்பத்திற்குள்ளாக்கி விடுகின்றனவே. இவ்விதமின்றி யொருவன் பெரும்பிரயத்தினத்தாற் றனது துர்க்

குணவியல்பை யடக்கிச் சாந்தப்படுத்துவானாயின், அதனுலவனிடமிருந்து, சாந்தி, பமெதிமையமான சலனங்களை வெளிக்கிளம்பி மற்றவர்களிடஞ் சேர்ந்து நம்பிக்கைகளையத் தாபிக்க முயன்றுவருமாகையால், அயலார்களுந் தத்தம் அதமகுணங்களை யடக்கிக்கொள்ளத் திறமை யதிகரித்தலுங் கூடுமன்றோ! இவ்வண்ணம் ஒருவன் பிறன் ஞாபகமின்றித் தனியே நிற்கும் பொழுதுங்கூட மற்றவர்களைத் தனது நினைவுகளினாற் சம்பந்தித்து, அவர்களது சுகதுக்கமாதிகளுக் கொருவாறு காரணமாகிறானென்பது திண்ணம்.

இம்மட்டோ? இவ்விதந் தன்னையறியாமலே சதாகாலமுந் தனது நினைவுகளாலேயே பிறரைச் சம்பந்தித்து அவரது க்ஷேமாக்ஷேமங்களுக் கேதுவாதலொடு நில்லாமல், தானே வேண்டுமெனப் பிறருக்கு நன்மை யுண்டுபண்ணவு மிவ்வெண்ணங்களை யொருவ னுபயோகித்தலுங் கூடுமன்றோ!.

இவ்விதமாய் துன்பத்தால் வாட்டமுற்றவர் பலருக்கு நாம் மனோமயமான சாந்தியுஞ் சமாதானமு மளிக்கும் பிரயத்தினங்களைச் செய்யலாம். இஃது நல்வழியிற் செல்லும் பழக்கமுடைய விரும்புவோர்க்கு தம்முபகார மாதிகளைப் பிறரிடம் புரிவதற் குபயோகப் படுத்திக்கொள்ள வுதவு மோர் சாதனவழியாகும். மற்றெவ்விஷயத்திலு முள்ளதுபோல் இங்கும் இவற்றையெல்லாந் தெரிந்துகொள்வதால் தகுந்தவளவு ஐசுவரியங்களும், சாமானிய வலனினருக்குக் கிட்டாத லாபங்களுங் கிட்டுமன்றோ! ஆதலின் அறிவே தகுந்த சக்தி திறமைகளை யளிக்கும் வஸ்துவாகின்றது. இன்னவகை நினைவுகளா லின்ன பலன் அவற்றை ஆக்குவோர்க்கு வேறிடத்திலு அன்னியவிடத்திலு முண்டாகுமென்பதை யறிந்துகொண்டா லுடனே நாம் விரும்பும் முடிவுகளுக்கேற்ப வுசிதமான சிந்தனைகளையே தக்கவாலோசனையுடன் நாமே யாரம்பித்துக் கொள்ளலாகுமன்றோ! சிந்தனைகளைச் சிருட்டித்துக்கொள்ளவல்லாரெவரு மவற்றால் பிறர்க்குதவுதல் கூடும். பிறர்க் குபகரிக்கத்தக்க திற

மைவாய்ந்தோரு மவ்வித மன்னிருக் குதவாது நிற்றல் எவ்வா ற்ருனும் பொருந்தாது. ஆதலின் துர்க்குணங்களாகு மாப்த்து க்களினின்றுந் தன்னையே தப்பித்துக்கொள்ளுவதற்காக மட்டு மன்று, பின்னைப் பிறர்க்கு நலம்புரியு நிமித்தமாகவும், மேலே கூறிப்போந்தவண்ணம் தனதியற்கையின் உட்பிரிவுகளான இச்சை, நினைவுகளாம் அம்சங்களை முழுவதுந் தன்வயப்படுத் திப் பரிசுத்த மாக்கிக்கொள்ளல் மிக வின்றியமையாதது வா குமன்ரு! ஏனெனிலிவ்விதந் தன்னையே யடக்கியாள வகை யறியாவிடில் சமயங்கள் நேரும்பொழுதெல்லாம் பிறர்க் குத விபுரியுந் திறனடைதலுஞ் சாத்தியமாகாது.

இவ்வித காரணங்களால் இச்செகத்தின் பரிபாக மார்க் கத்தையுள்ளபடி யுணர்ந்து நலம்பெற வழிதேடுவோன் எவ னும் தனது நினைவுகளிற் றீயவற்றையெல்லா மகற்றியவற் றுண் மிகவுயர்வு முத்தமமும் பொருந்தியவற்றையே போற் றிவளர்க்குந் தன்மையனேயாவன். யாவரிடமுங் கடவுள் வீற்றிருப்பதை தனதறிவி லுணர்பவனுதலிவன், எவரிடத்தி லுங் கடுகளவாயினு உத்தம குணமில்லாதிருத்த லமையா தெனவே நம்பிக்கையடைந்து, எவ்விடத்திலும் பொறுமை யுஞ் சகிப்புங்கொண்டவனுய்த் திரிவன். எச்சம்பவத்திலு மெ வரிடத்திலு நன்மையையே காணுவோனுகி யாவற்றையு நம்பி க்கையுடனேயே யபிமானித்துக் காலங்கழித்து வருவன். ஏனெனில் எவ்வஸ்துவினிடத்தும், எம்மானிடனிடமும் தீமை யல்லது குறைவுகளெனப் படுவதியாவும் நித்தியமானவைக ளல்லவாதலின், சின்னுட்களில் மறைந்துவிடக் கூடியவைகளே யென்றும், அவற்றுள் ளெல்லா நிச்சயமாய்த் தங்கிக்கிடக்கு நன்மையா மம்சமே சாசுவதமாகு மாதலின், அதுவே நாள டைவில் விருத்தியாகி நிலைத்துநிற்ப தாகுமென்றுந் தெறிந்து கொள்ளலே யுண்மை யறிவாகும். இவ்வாறு தனக் கெதிர்ப் படு மெதனிடத்தும், நன்மையல்ல துசிதமாகு மம்சத்தை மட்டு நாடி, யதை யுணர்ந்தபின்னர் தனது முயற்சியா லதை வளர்த்துவிடற்கே முயன்று, பிறர் எல்லோருக்குஞ் சகாயம்

புரிவதற்கே யல்லாமல், தீங்கிழைத்தற் கிணங்காமலே நடந்து வருவதால், இவன் சகோதரா மனந்த மானிடருக்கும் வரவர விசேடவுபகாரியாகி உலகத்தை நடாத்திவரு மகா சத்தியின் பிரவாஹத்தோடிணங்கி யொழுகுவோனாகிறான்.

இதுகாறுங் கூறிப்போந்தவற்றால் நாமுணர்ந்துகொள்ள வேண்டியதியாதெனில், இப்பிரமஞான வாராய்ச்சி யென்பது தற்காலத்தி லுபயோகப்படாததும் எவ்விஷயத்தையுங் குறிப்பிட்டுப் பேசாது பொதுவாகவே யெடுத்துக்காட்டுவதுமானதோர் விளக்கமன்று, பிள்ளைக் குழந்தையோ, அல்லது தாய் தந்தையோ, தொழிலாளியோ வல்லது சிற்பத்தில் வல்லவனோ, கவிவாணனோ அல்லது தத்துவவிசாரியோ, இவற்றுள் எவ்வகையினனாயினு மவ்வவனுக்குத் தனியே பயன்படுங் குறிப்பிட்ட விஷயங்களை யெல்லா மெடுத்துக்காட்டுந் திறனு மியல்புமுடையதுவேயாகும் என்க. இவ்வுயர் ஞானவாராய்ச்சி பரவிச் சென்றிருக்கு மிடங்களிலெல்லா மிப்பலன் மிகப் பிரகாசமாய் விளங்குவதை யாவருங் கண்கூடாய்க் காணலாகும். பிரபஞ்ச முழுவதிலு நிலைபெற்ற வுண்மையான சகோதர பாவமெனுங் கருத்தை பகிரங்கத்தில ஸ்தாபனம் பண்ணுவதில் இதுவரை யிவ்வறிவால் மிகுந்த பிரயோசனமே யுண்டா யிருக்கின்றது.

ஆதலின் இதன் கொள்கைகளைச் சற்று விசாரித்து ஜனங்கள் பொதுவாயாகவாவது ஏற்றுக்கொள்வார்களாயின், இவ்வுலகின்கண் இரண்டு தேசத்தார்க்குள்ளும் யுத்தமென்பது சம்பவிப்பது பரிகாசத்திற் குரியதோர் கருத்தாகும். அப்பாலிவ்வுயர்ஞானத்தின் நோக்கங்களைப் பூரணமா யங்கீகரிப்பார்க்கோ, அவர்களது நினைவு செயல்களே மிகமேம்பட்டதோர் நிலையை

யடைந்துவிடும். இவ்வகை யறிவு வெறுமையான ஞானமாய் மட்டு நில்லாமல் அஃதுடையானையே மாற்றிக்கொள்ள 'வல்ல தோர் சக்தியா யிருப்பதுமன்றி, உலகங் கடைத்தேறி மேற் செல்லுவதற்கேற்ற வழியேயாகும். இவ்விரிவான விஷயத்தில்' யானிந்நூலிற் கூறிவந்திருக்குஞ் சில குறிப்பிட்ட விவரங்களை மட்டுமாவது நாமொப்புக்கொள்வோமாகில் இவ்வுண்மை நிச் சயமாய்ப் புலப்படுமென்க.

ஏனெனில் இவ்வுலகங்களில் எச்சம்பவமும் முடிவில் க்ஷே மமே யடையும் வண்ணம ஏற்பட்டு வருகின்றதெனு நம்பிக் கையால், நம்மனங்களிற் சாந்தமுஞ் சந்தோஷமுந் தங்குவ தால், நமக்குமட்டு மல்லாமல் அகில மன்பதை கட்குமே நன் மை யுண்டாகுமன்றோ! இவ்விதமே பயஞ் சஞ்சல மென்பது முழுவதையுமற நீக்கிக்கொள்வதாலும், பிறனொருவனுக் கிடை ஞ்சல் விளைத்தலால்தான் க்ஷேமமடைதல எவ்வாற்றானுஞ் சாத் தியமாகாதெனும் விசாலமான வுண்ணோக்கம் பெறுதலாலும், இதன் பயனாய் வாய்க்கும பரந்த பொறுமை, விரிந்த கருணை யாலும், மானிடர்முதல் மிக கடையதான செந்துவரை சகல வுயிர்கண்மாட்டும் பரோபகார புத்தியையே காட்டிவரு மிய ற்கை படைத்து விளங்கலாலும், நமது சிந்தை செயல்களி னியற்கையைச் சரியானது அல்லது பிசகுடையதெனத் தெ ளிந்துகொள்ளற்குற்ற வுரைகல்லென, நம்முன்னோரையிலோர் நடுநிலைமையாகுங் கருத்தை, யாசிரயித்தலாலும், மானிடனெ ன்பான் சரீரமல்ல, மற்று, ஆன்மாவே யாவன் எனும் யதார்த் தத்தை யுணர்ந்து நிற்றலாலும், அதனால் மனிதனது யதார்த்த வாழ்வாவது அவ்வான்ம வாழ்வேயாகு மாதலின், அவ்வான் மாபிவிர்த்தியை நடாத்திவருவது அவன் வாழ்வின் காரிய மாகுமென்று தெளிந்து கொள்ளலாலும்; இனி மரணமென்ப துநமக்கு பயவேதுவாகாமல் நாமறிந்துகொள்ளி னமக்குதவி

செய்யு மேற்பாடாகவே முடியமென்றும், இப்பிரபஞ்சரச
னையில் அவரவர் முன்சன்மங்களிற் செய்த நல்வினை தீவினைக்
குகந்த பலன்களே யவர்க்குக் கிட்டுவதால், அநீதியென்ப
தொரு சிறிது முண்டாகா தாதலின், தத்தம் க்ஷேமாக்ஷேமத்
தை தாமே யொவ்வொருவரு முத்பத்தி செய்துகொள்கின்ற
னர் என்பதுவே பரம வுண்மையென்றும், ஆகவே யினிவருங்
காலத்திய க்ஷேமாக்ஷேமத்திற்கு, நாமிக்காலத்தில் செய்யு மொ
வ்வொரு செயலும் பேர மொவ்வொரு பேர்கல் அஸ்திவாரத்
தினின்று மேலோங்கி நிலம்புமோர் மாளிகைக் குதவுங் கற்க
ளைப்போ லுதவுகின்றனவென்றும், ஆகலின் நமது நினைவுகளு
க்கு நாமே பொறுப்பாளியென்றும், அதனு லவற்றின் பலங்
களை யகற்றி பெருமை படைத்தனவா யாக்கிக் கொள்ளலால்
ஒவ்வொருவரும் தாளடைவில மிக வுயர்வடைந்து மேன்மை
பெறுவரென்பது மட்டுமன்று, பின்னைத் தமது அபிவிர்த்தி
யால் மற்றியாவரையுமே யுயர்த்தி யுபகரித்தலு மாகுமென
றும், நமக்குள்ளங்கை நெல்லிக்கனியென தெளிந்தவுணர்வு
ஏற்படுதலாலும், இவற்றின் காரணமாய் சகல மனுஷிய
சமூகமும் ஆனந்தத்தையுந் துன்பநீங்கிய வமைதியையு மடை
யுமென்பதிற் றடையுமுண்டோ?

இம்மஹிமைவாய்ந்த விபயோறிவை யாராய்ந் தனுப
விக்கத் துணியு மாந்தருக் கினி யான் கூறவேண்டியது மொ
ன்றுண்டு. அஃதியாதெனில், சின்னாட்களாய் அவ்வழியி லுழை
த்துவரும் எம்போலியருக்கு நேர்ந்திருப்பதுபோலவே, இவர்
கட்கும், இவ்வரிய விஷயங்களைக் கற்றுணருந்தோறும் அதன்
நுண்ணிய விவரங்கள் தம்மனங்கட்கு அதிக மகிமான திருப்
தியையும், தாம் பன்னாட்களாய்க் கோறிக் கனவுகண்டுவந்த
பேரவாக்களி னீடேற்றத்தையு முண்டாக்கு மென்க. இதன்

நுட்பங்களை யுற்றுநோக்கிச் சோதிக்கப் புகுவார் யாவரும், தாமித்தொழிலைக் கைக்கொண்டதற்கு வியசனமுறாமல், இனி வரும் பல்லூழி காலத்திலும் இத்தகைப் பெருமாண்புடை ஞானமாநிதிப் பெருமுறையையாம் பெற்றோமெனு மிருமாப்பினி லாழ்ந்து நிற்றலு மமையும். இம்மெய்ஞ்ஞானமாக திருப்பெருந்துறையின் மார்க்கத்தையே யிக்காலத்தவர் 'தியாஸபி' எனும் புதுப்பெயரிட் டழைக்கின்றனர்.

சுபமஸ்து

* சோக்கருதிச்சிந்தனையைத் திருந்தவைத்துச்சிந்திமின்.

தாமேதமக்குச்சுற்றமுந் தாமேதமக்குவிதிவகையும்
யாமாரெமதார்பாசமா ரென்னமாயமிவைபோகக்
கோமான்பண்டைத்தொண்டரொடு மவன்றன்குறிப்பேகுறிக்கொண்டு
போமாறமைமின் பொய்நீக்கி புயங்கனாள்வான்பொன்னடிக்கே.

புகவேவேண்டாபுலன்களினீர் புயங்கப்பெருமான்பூங்கழல்கண்
மிகவேநினைமின்மிக்கவெல்லாம் வேண்டாபோகவிடுமின்க
ணகவேஞாலத்துள்புகுந்து நாயேயனையநமையாண்ட
தகவேயுடையான்றனைச்சாரத் தளராதிருப்பார்தாந்தாமே.

திருவாசகம்.

# சாந்தி வசனம்.

இத்தொடரில், பிரம்ம வித்தியா மகாசபையைச் சேர்ந்த உயர்ந்த அனுபவிகளாற் கூறப்பட்டுள்ள அரிய ஆங்கில நூல்களை செந்தமிழில் தகுந்தவர்களால் மொழிபெயர்த்து மாதமொரு புஸ்தகமாக பிரசுரம்செய்து வருகிறோம். இதனாற் கிடைக்கும் சகல வருமானமும் இவ்வூர் தர்மக் கலாசாலைக்கே உபயோகமாகிறது.

| | | |
|---|---|---|
| வருஷசந்தா தபால் சார்ஜுள்பட இந்தியாவுக்கு ரூபா | | 2—0—0 |
| ௸ | ௸ வெளிநாடுகளுக்கு ரூபா | 2—8—0 |
| | தனி நம்பர் (தபால் சார்ஜ் பிரத்தியேகம்) | 0—3—0 |

இதுவரையில் வெளியான புஸ்தகங்கள்:—

Vol. I.

No. 1. கர்மபால போதம்.
No. 2. ஆத்மார்த்த ஒழுக்கப்பயிற்சி, கிரஹஸ்தாச்ரமம்.
No. 3. பக்தியின் மகிமை.

(இம்மூன்றும் செலவாகிவிட்டன.)

| | |
|---|---|
| No. 4, 5, 6 'அவன் பெயரால்' (2 புஸ்தகம்) | 0—6—0 |
| No. 7 to 10 கல்வி கற்பித்தல் ஈசுவர கைங்கரியம் | 0—5—0 |
| No. 11, 12 'எனது பிரதிக்ஞை' முதல்பாகம் | 0—4—0 |

Vol. II.

| | |
|---|---|
| No. 1, 2 'எனது பிரதிக்ஞை' இரண்டாம் பாகம் | 0—6—0 |
| No. 3, 4 'எனது பிரதிக்ஞை' மூன்றாம்பாகம் | 0—6—0 |
| No. 5, 6 & 7 பிரமஞானத்தின் விசாரத்தால் நமக்குறும் பயனியாது | 0—9—0 |

ஸ்ரீமான் ஜினராஜதாஸர் அவர்களுடைய உருவ[illegible]டம் அணா 1.

தேவையுள்ளவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

---

## விளம்பர விகிதம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| ஒருபக்கத்திற்கு | ஒரு மாதத்திற்கு | 3 | 0 | 0 |
| அரைபக்கத்திற்கு | ,, | 2 | 0 | 0 |
| கால்பக்கத்திற்கு | ,, | 1 | 8 | 0 |

ஒரு வருடத்திற்கு ஒப்பந்தம் செய்துகொள்ளுகிறவர்களுக்கு மொத்தத்தொகையில் 100-க்கு 12½-விகிதம் கழித்து வாங்கப்படும். எப்போதும் முழுத்தொகையும் முன்பணமாய் அனுப்பப்படவேண்டும்.

சாந்தி வசனம் ஆபீஸ்,

திருமெய்ச்சூர், பேரளம் போஸ்ட், தஞ்சாவூர் ஜில்லா.

## அந்நிபெஸண்டு அம்மையார் உபந்நியாசம்.

1. முகவுரை:—நான் உத்தேசித்த விஷயத்தை உரைக்குமுன், தங்கள் முன்னர் நான் நிற்கும்படி நேரிட்டதைப்பற்றியும் என்னுடைய உபந்நியாச விஷயத்தின் அபிப்பிராய பேதங்களைப்பற்றியும் முகவுரையாகச் சில வார்த்தைகள் சொல்ல வேண்டியவளாக இருக்கின்றேன். இவ்விடத்தில் நான் நின்று உரையாடுவதற்கு அநுமதிசெய்த உங்களுடைய புரோஹிதருக்கும் உங்களுக்கும் வந்தநம் அளிக்கின்றேன். நான் பிரஸ்தாபிக்கப்போகும் அபிப்பிராயங்கள் இந்த ஸ்தாநத்திற்காவது, இந்த ஸ்தானத்தினின்று வழக்கமாய் உபந்நியஸிக்கும் புரோஹிதர்க்காவது யாதொரு பாதகத்தையும் உண்டுபண்ணக்கூடியதன்று என்பதை நான் முதன்மையில் வற்புறுத்திச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். இந்நகர ஆலயத்தை நடத்துகிற புரோஹிதர், இப்போது வெளியில் உலாவிவருகின்ற கொள்கைகளைக் கற்று, அறிஞர்களுடைய பிரயோஜநார்த்தமாக, தைரியமாய் வெளியிடுகின்றார். அவ்விதம் சிலர்தான் வெளியிடத் தைரியமுடையவராவர். அவ்விதம் அவர்கள் செய்துகொண்டு வருதலுக்கு நாம் எல்லாரும நன்றி பாராட்டக் கடவோம். ஒரு உண்மையானது வெளியில் உலாவுமாகில் அதை வசநித்தலே ஜநங்களுக்குச் செய்யும் உயர்வான கைங்கரியமாம். உண்மை என்பது, அதை உள்ளபடி உணர்ந்து தைரியமாய் வெளியிடுகிறவரின் வாய்ப்பிறப்பைப் பெரும்பாலும் பொருத்ததாக விருக்கிறது. அநேகர் உண்மை என்று தெரிந்ததை வெளியிட அஞ்சுவர். பிறர், வெளியிடின் ஆதரவுடனே அங்கீகரிப்பர். அப்படி வெளியிடுந்தைரியம் சிலரிடந்தான் உண்டு. அதனால் நான் இவ்விடமிருந்து வசநிக்குங் கொள்கைகள் இந்த ஸ்தாநத்தினின்று வழக்கமாய் வெளிப்பட்டுவரும் அபிப்பிராயத்துக்கு எவ்விதத்திலும் யாதொரு கெடுதலையும் செய்யாமல் இருக்கவேண்டுவன என்பது என்னுடைய முக்கியமான கோரிக்கையாம். என் கொள்கைகள் என்னுடையனவேயாம். உங்கள் கொள்கைகளும் உங்களுடையனவேயாம். நான் கண்டு அறிந்த உண்மையை இன்று இரவில்

வசித்தல், அதை முன் அறியாதார் அங்கீகரிக்க வேண்டு மென்ற கருத்துடனன்று. என் வாய்ப்பிறப்பு எவ்வாற்ருனும், (காம்பல் என்பவரைப்பார்த்து) உம்முடைய உத்தரவாதத் தின் பளுவை அதிகப்படுத்தாம லிருக்கவேண்டுவது என்பதே என் கோரிக்கையாம்.

2. ஞானமுறை ஒரு இடத்தைப் பற்றியதன்று:--சிரத்தை யுள்ள அறிஞர்களுங்கூட முறையிடுவதாவது, உலகவாழ்க்கை நிலையில் ஆன்மமுறையான ஸன்மார்க்கத்தைத் தாங்கள் அநுஷ் டித்தல் கூடாமையா யிருக்கிறது என்பது. "இப்போது இரு க்கின்ற என் நிலைமையானது வேருக இருந்தால், எவ்வளவோ நன்மையான் காரியம் முடிப்பேன். இப்போது இருக்கிற வேலை, அதனுல் உண்டாகும் கவலை, மனக்கிலேசம், உலகப்பற் றுக்கள் இவை இல்லாமற்போனுல், இப்போதைவிட அதிக காலம் ஸன்மார்க்கத்தில் கழிப்பேன்." என்னும் இக்கொள்கை சரியன்று. வெளியிலுள்ள விஷயங்கள், ஒருவன் நல்வழியில் ஒழுகும் இயல்பை உண்டாக்கவும் அழிக்கவும் இயலாவாம். ஸன்மார்க்கம் என்பது இடத்தையும் நிலைமையையும் பொருந்த தன்று. அது, உலக விஷயங்களைப்பற்றி அவனவன் கொள் ளும் மனோநிலையைப் பொருந்தது. ஆத்மா, உலகத்தில் ஆழ்ந்தி அதன் வாழ்வில் வசப்படாமல், ஆத்மாவுக்குரிய கைங்கரியத்திற்காக உலகவாழ்வை எவ்விதம் மாற்றுவது என் பதைப்பற்றிய முறையை இன்று இரவு தங்களுக்கு அறி விப்பேன். லௌகிக முறைக்கும் ஸன்மார்க்க முறைக்கும் உள்ள சம்பந்தத்தை அறியாமல் ஒன்று மற்றென்றுடன் முரணுகிறதென்று நினைத்து, அவ்விரண்டையும் பிரித்தால், அதாவது லௌகிக முறை ஒரு பக்கமும், ஸன்மார்க்கமுறை அதற்கு வைரியாக மற்றொரு பக்கமும் வைத்து எண்ணினு லும் பேசினுலும், அப்போது லௌகிக சம்பந்தமான தொ ழில்களின் அவசரமும் ஆத்திரமும் அந்தந்தத் தொழில்களுக் குரியபடி ஏற்படும் படபடப்பும் லௌகிக ஆசைகளின் என் றுமுள்ள பகட்டும், அவைகளாலுண்டாகும் கிலேசங்களும் கவலைகளும் ஸன்மார்க்க முறையை அநுசரித்த உலகவாழ்வு

சலமல்லவென்றும், உபயோகமற்றதென்றும் நம்மை நினைக்கும்படியாகச்செய்யும். உலக விஷயங்களைப்பற்றிய நெறி தான் உண்மையான நெறியென்றும நமக்குத் தோன்றும். அதனால் இவ்வபிப்பிராயத்தை மாற்றுகிறதற்கு ரஸவாத முறையில் போல ஒரு குரு வேண்டும், ஒரு உபாயம் தேடல் வேண்டும். அப்போதுதான் உலகவாழ்வு அநித்தியமென்றும் உண்மையல்லவென்றும் ஆத்மசம்பநதப்பட்ட வாழ்வில், அதாவது ஸங்மார்க்கமுறையில் அநித்தியமென்றும் உண்மையல்லவென்றும தெரியவரும். அவ்வித உபாயத்தை அறிந்து அநுஷ்டிப்போமாகில் லௌகிகமுறை மூலமாகவே ஆத்மமுறையான ஸநமார்க்க முறை ஏற்படுதல் கூடும். லௌகிக வாழ்வே ஸநமார்க்கத்தை வெளிப்படுத்தும் சாதநமாகவும் அமையும். அதை மறைக்கும் தன்மையதாக ஏற்படாது. அதை வெளியிடுவதைத் தடுக்கவும் மாட்டாது. இன்றிரவு அவ்வுபாயத்தைக் கண்டுபிடிப்போம்.

3. ஸங்மார்க்கமும் உலக மார்க்கமும்:—உலகததிலிருந்து கொண்டே ஒருவன் ஸநமார்க்கமுறையை அநுஷ்டித்தல் கூடுமாவென்றவினு முன் காலத்தில் பலமுறை ஏற்பட்டு அது முடியாதென்றே விடை கொடுக்கப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு நாட்டிலும, ஒவ்வொரு மதத்திலும், ஒவ்வொரு காலத்திலும், சரித்திரவாயிலாக நான் தெரிநதுகொண்டவரையில், இக்கேள்வி கேட்கப்படும் காலமெல்லாம் "இல்லை" யென்றே மறுமொழி ஏற்பட்டிருககிறது. அதாவது "லௌகிகன் ஸங்மார்க்க முறைபற்றி ஒழுகவொண்ணுது." எகிப்து தேசத்தின் பாலைவனங்களிலும் இந்தியாதேசத்தின் வநங்களிலும், ரோமன்காதலிக் நாடுகளிலும், சநநியாசிமடங்களிலும், கன்னியாமடங்களிலும் இவ்வாறு ஜநக்கூட்டத்தைத் தவிர்த்து ஏகாந்தங்கொண்டு ஈசுவரனை சாக்ஷாத்கரி என்ற மறுமொழி தான் ஏற்பட்டிருக்கிறது. இறைவன் ஞாநத்திற்கும் ஸங்மார்க்கமுறையில் நடைபெறுவதற்கும், ஜநக்கூட்டங்களினின்று ஓட வேண்டுமென்பது அவசியமென்றால் நம்மவரில் பெரும்பாலர்க்கு ஸங்மார்க்கமுறை முடியாத காரியமென்று ஏற்படும்.

ஏனென்றால், நாமோ உலகத்தை முற்றும விடவும முடியா தவர்கள். உலகதர்மத்தை நமக்கு வேண்டியபடி இணக்கிக் கொள்ள இயலாதவர்களாகவு மிருக்கின்றோம். இவ்விஷயத்தில் நான் தங்களுக்குத் தெரிவிக்கிறது யாதெனில், இது முற்றும தவறான அபிப்பிராயம்; இவ்வெண்ணம் சரியன்று; இவ்வபிப்பிராயம இக்காலத்தில் அதிகமாக விருத்தியடைந்து பரவிக்கொண்டிருக்கிறதை நான் அறிவேன்.

அதாவது சநமார்க்கமுறையை அநுஷ்டிக்க வேண்டுமாயின் காடுகளுக்குச் சென்று, குகைகளிலும் மடங்களிலும் வசித்தால்தான் இயலும் என்ற அபிப்பிராயம் இத்தேசத்தில் தற்காலத்தில் நிகழாவிடினும், லௌகிக முறையையும் சமயமுறையையும் ஒன்றாகக் கலக்கக்கூடாது, இரண்டும் பிரத்தியேகமானவைகள் என்ற அபிப்பிராயம் இக்காலத்தில் அதிகமாக நடைபெறுகின்றது. இது சரியானதன்று என நான் தங்களுக்குத் தெரிவிக்கின்றேன். இத்தேசத்தில் புண்ணியவிஷயம் வேறு, உலக விஷயம் வேறு என்ற அபிப்பிராயம் நவீநமானது. ஞாயிற்றுக்கிழமை ஈசுவரனுக்கு உரித்தான நாளென்றும் மற்றைய நாட்கள் அல்லவென்றும் இந்நாட்டில் எண்ணுகிறார்கள். அதனால் ஈசுவர கைங்கரியத்திற்குரித்தான நாள் ஞாயிற்றுக்கிழமையெனக் கொண்டாடுகிறார்கள். ஒரு கிழமைக்கு ஈசுவரனின் உரிமையை ஏற்படுத்தியும், வாரத்தின் மற்ற 6 கிழமைகளுக்கும் அவ்வுரிமையை மறுத்தும, அதாவது, வாழ்நாளில் 6 பாகங்களை ஞாநமுறைக்குப் புறம்பாக வைத்தும் ஒரு பாகத்தைமாத்திரம் தனியாகப்பிறித்துச் சந்மார்க்கத்திற் குரித்தானதென்று ஏற்படுத்தல்போலவாகும். அதனால்தான் சாதாரண ஜநங்கள் வசநத்தில், புண்ணிய சரித்திரமென்றும், பாபமான லௌகிக சரித்திரமென்றும், சமய முறைக்கல்விப்பயிற்சி யென்றும், லௌகிகப் படிப்பென்றும் இவை போன்ற மொழிகள் வழங்குகின்றன. இம்மொழிகளால் ஜநங்களுடைய மநம் மதிமயங்கி, ஆன்மவிஷயத்தைப்பற்றியும் உலகவிஷயத்தைப்பற்றியும் தப்பான அபிப்பிராயம் நிகழ்கின்றது. சரியான அபிப்பிராயம் யாதெனில், ஆன்மாவென்றால் பிராணன். உலகமென்றால்

உடல. உடலானது உயிரின் வெளித்தோற்றம். உயிரின்றி உடல் சவமாகும். உடலின்றி உயிர் வாழ்வும் இயலாது. அதாவது உயிர் செயலற்றிருக்கும். இதைப்பற்றி விஸ்தாரமாக உண்மையான அபிப்பிராயங்களை உங்கள் முன்னர் தெரிவிக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன்.. உலகம் என்றால் ஈசுவர ஸங்கல்பம். ஈசுவரனுடைய மநத்தின் சங்கல்பரூபமாக உலகம் பரிணமித்துத் தோன்றுகின்றது. பலனுள்ள எல்லாக் கிரியைகளும் ஈசுவரச் சங்கற்பத்தின் பல பரிணாமங்களாம். உலகமென்ற சக்கரங்களை ஈசுவரன் சுழலச்செய்கிறார். மனிதர்களோ, அச்சக்கரங்களின் விளிம்புகளை ஸ்பரிசிக்கும் அவரது கரங்களாம். உலகில் நடத்தப் பெறும் எல்லாச் செயலும் அவரது கர்மமாம். மனிதனுக்கு உதவிபுரியும் ஒவ்வொன்றும், உலகக்கிரியைகளைக் கொண்டுசெலுத்தும் ஒவ்வொன்றும் ஈசுவரனது கிரியையென்றறிதலே உண்மையான அறிவு. அப்படியில்லாமல் லௌகிகமானவைகளென்றும் பாபமானவைகளென்றும் பிறித்து மதித்தல் அறிவீனமாம். நாணயசாலையில் தொழில் செய்யும் பெரிய வியாபாரியும், பெட்டியடியிலிருக்கும் சிறு வியாபாரியும், வைத்தியசாலையில் தொழில் செய்யும் வைத்தியனும், ஆகாயத்தின்கண் வாநசாஸ்திரத்தைப்பயிலும் ஜோதிஷ சாஸ்திரியும், ஞாநத்தை உபதேசிக்கும் குருவைப் போலவே எல்லாரும் ஈசுவரகைங்கரியத்தில் ஈடுபெற்றவராவர். இவ்விதமாக உலகத்தில் நடைபெறும் தொழிலை யறியவேண்டும். உலகத்தொழிலைக் கீழ்க்கடையில்வைத்து மதித்தல் அறிவின்மையேயாம். ஒரே பிராணன் எங்கும் உளதென்றும், எல்லா வஸ்துக்களும் அந்த ஒரே பிராணனின் அதிஷ்டானத்தை உடையனவென்றும் நாமறியவேண்டும். இன்றேல், நமது மநோபாவத்தில் நாம் மோசம்போனவராவோம்; ஒவ்வொரு வஸ்துவினிடத்திலும் இயங்குகிற பிராணன் ஒன்றேயென்றும், எல்லா வஸ்துக்களும் அவ்வொரே பிராணனின் பல ரூபங்களென்றும் அறியும் திவ்ய ஞாநத்தைக் கிரஹிக்காமல் கண் குருடர்களாக நம்மையாக்கிக்கொள்வோம்.

4. ஈசுவரன் எங்கும் பரந்துளன், ஸர்வாந்தர்யாமி. நீங்களும் ஓரே பிராணனின் அம்சங்கள். ஈசுவரனின் ஒரு சங்கற்பமே, உலகங்களைப் படைப்பதும் காப்பதுமாம். வெளிப்படாத ஈசுவரசக்தி எவ்வளவோ அபாரமானதாக இருக்கின்றதுதான். கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணன் "யான் இப்பிரபஞ்சம் முழுவதையும் ஒரு அம்சத்தினால் சிருஷ்டித்துத் தாங்கி நிற்கின்றேன்" என்று உபதேசித்த பிரகாரம், ஈசுவரன், சிருஷ்டியின்* அளவிலன் அதைக் கடந்தவன். ஆயினும், வியக்தப்பட்டிருக்கிற பிரபஞ்சம் ஈசுவரத்தன்மையது. ஈசுவர அம்சம் அது என்பதில் யாதொரு சந்தேகமுமின்றே! அவர் எங்கும் இருக்கிறார், ஒவ்வொரு வஸ்துவிலும் உள்ளார், அதனால் †தூணிலும் உள்ளார், துரும்பிலும் உள்ளார். வணிகர் சாலையிலும், மலையிலும், நாட்டிலும், காட்டிலும், ஜநக்கூட்டத்திலும், குகையின் ஏகாந்தத்திலும், அவர் ஓரே மாதிரியாக இருக்கின்றார். அவர் மஹிமையைப், பனிக்கட்டிகள் உறைந்திருக்கும் மலைகளின் பிரகாசத்திலும், மரங்களடர்ந்த கண்ணுழையா வநத்தின் காம்பீரியத்திலும், மனிதன் ஸஞ்சாரமில்லாத மலைப்பள்ளத்தாக்கின்கண் கேட்கும் மந்தமான சப்தத்திலும், மற்றவிடங்களை நோக்க, நாம் அறிதல், லகுவானவிஷயமே. நான் சொல்லுகிறது யாதெனில், அவ்விடங்களில் அவர் மகிமையைத் தெளிவாயறிவோம், உணர்வோம். மற்றவிடங்களிலும் அவரையறியஹேது இருந்தாலும், அவர் வசநிக்கும் வார்த்தையைக் கேட்கின்றோமில்லை; செவிடாயிருக்கிறோம். அவர் பேசுகிறார். நாம் கவனிக்கின்றோமில்லை; குற்றமும் குறையும் நம்மிடமுள்ளன. நாமிருக்கும் நகரத்தின் வாழ்விற்குரிய பரபரப்பும் ஆரவாரமும் கவலையும் மநச்சலநமும் இறைவன் பேசும் வாக்கைக் கேட்காமலிருக்கும்படி செய்விக்கின்றன. நம் மநம் உறுதிப்பாடுள்ளதாகவும் நம் காதுகள் நுண்ணிய சப்தத்தைக் கேட்

---

* "விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய் எண்ணிறந்து எல்லை யிலாதானே!"—மாணிக்கவாசகர்.

† பிரஹ்லாதருக்குத் தூணில் தோன்றினார். கேநோபநிஷத்தில் தேவர்களுக்கு துரும்பில் தோன்றினார்.